# ஸமர்ப்பணம்

ஸர்வ மங்கள மங்களையான ஸ்ரீ மாதாவாகவும் ஸகலர்க்கும் தனது மதுரமான அருளின் இன்பத்தை பொழிவதால் மோதகரனும், பூர்ணமாம் மதுரம் கொண்ட மோதககரனும். அக்கரம் மட்டுமன்றி ஆபாதசூடம் ப்ரமோத பூர்ணனுமான மஹாகணபதிக்கும், 'பழம் நீ' எனப்படுகிறவனாக பரஞ்ஞானம் பழுத்த மதுரகனியாகவே உள்ள குஹப்பெருமானுக்கும் ஜனக மாதாவாகவும், பஞ்சக்ருத்யம் புரியும் தேவேசர்கள் தொடங்கிப் புழு பூச்சி ஈறாயுள்ள சராசரங்கள் யாவுக்கும் அநேக கோடி ப்ரும்மாண்டங்களுக்கும் ஒரே தனிப்பெரும் தாயான மஹா மாதாவாகவும் உள்ள போதிலும், தனது பரமகருணையால் முதலில் ஸ்ரீ மதங்க மஹா முனிவரின் குமாரியாகவும், பிறகு மீண்டும் காஞ்சன மாலைக்கும் மலயத்வஜ மஹா ராஜனுக்கும் குழந்தையாக, பாண்டிய ராஜகுமாரியாகவும் உத்பவித்தவளும், விராட்புருஷனுடைய சரீரத்திலே, நித்ய மதுரமான சிவாம்ருதத்தின் சீதளதாரைகளை வர்ஷிக்கும், ஸஹஸ்ரதள கமல ப்ரஹ்மரந்த்ர ஸ்தாந ஸ்தலமான ஸ்ரீ ஹாலாஸ்ய மஹா க்ஷேத்திரமும், மொழிகளில் மிக இனிதான தேமதுரத் தமிழை சங்கம் வைத்து வளர்த்த கேந்திரமும், கதம்பவனம் என ப்ரசித்த பெயர் பெற்றதுமான மதுராபுரிக்கு மஹாராணியும். **"நூறுகோடி பிரமர்கள் நொந்தினார் ஆறுகோடி நாராயணர் அங்ஙனே ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர் ஈறிலாதவன் ஈசன் ஒருவனே"**-என்றபடி எந்நாளும் அழிவிலாத அநாதி மதுரனும் அம்ருத ம்ருத்யுஞ்சயனுமான ஸ்ரீ சுந்தரேச்வரப் பெருமானின் ப்ராண நாயகியும்,அரூபம் ரூபம் யாவுமாய் ஆத்யந்த்த ரஹிதமாய், எங்கும் பரவி நிற்கும் ஸச்சிதானந்த ரஸமும், அப்ராகிருதமான வாத்ஸல்யரஸமும், அநுபமமான ஸௌந்தர்ய ரஸமுமான இத்தனை திவ்ய ரஸங்களுக்கும் ஆதாரமும் ஆலயமுமாகவே மதுரமான பச்சை பசுங்குளிரொளிக்கிரணங்களைப் பொழியும் தனது திவ்ய மரகதத் திருமேனியைக் கொண்டவளும், அந்த திவ்ய ரஸங்கள் யாவற்றையும் தனது மீன்விழிகளாலேயே அநவரதமும் பொழிந்தே அகில புவனங்களையும் ரக்ஷிப்பவளும்.

நாதபிந்துகலாதீதையாக உள்ள போதே, நாதவித்யைக்கு நாயகியாகவும் ஸகல கலாத்மிகையாகவும், தான் இருப்பது போலவே, தனது அங்கயல் கண்களின் மென்னோக்குகளால் ஒரு புறம் 'மத்ஸ்ய தீக்ஷை' எனப்படும் நயன தீக்ஷா மார்க்கத்தின் மஹா ஆசார்யையாக, மனோவாக்குகளுக்கு எட்டாத நிர்விகல்பாதி நிர்மல ரஸாநுபூதிகளையும், இன்னொருபுறம் மனமும் வாக்கும் மதுரஸத்தில் அமிழ்ந்தாற்போல் களிப்புறும் படியான கவிதா காவ்ய கலாரஸாநுபூதிகளையும் அநாயாஸமாக அநுக்ரஹிப்பவளும். அக்கலைகள் யாவற்றிலும் பரம உச்சமான ஸங்கீதத்தின் அதிதேவதையாய், அதிமதுரமான நாதம் பொழியும் மாணிக்ய வீணையையும், ஸகல வித்யைகளின் ஸாரார்த்தங்களையும் மதுர மதுரமாக மென்குரலில் கொஞ்சி மிழற்றும் பச்கைக்கிளியையும் தரிப்பவளுமான, ஸ்ரீ மீநாக்ஷீ ராஜ மாதங்கீ பரமேச்வரியின் மஹா மதுரமான நிஸ்துல நிர்வ்யாஜ கருணாரஸத் தேன் தாரைகளை வர்ஷிக்கும் திவ்ய கோமள சரண கமலங்களில் -**ஸமர்ப்பணம்** -

*கண்களிக்கும் படி கண்டு கொண்டேன் கடம்பாடவியில்*
*பண்களிக்கும் குரல் வீணையும் கையும் பயோதரமும்.*
*மண்களிக்கும் பச்சை வண்ணமுமாகி மதங்கர் குலப்*
*பெண்களிற்றோன்றிய எம்பெருமாட்டி தன் பேரழகே.*

**- அபிராமி பட்டர்-**

**பின்குறிப்பு** - தசமகா வித்யைகளில் ஒன்பதாவது மஹாவித்யையாக ஒளிர்வதால் 'நவமீ' என்றே சிறப்பு பெயர் கொண்ட ஸ்ரீ ராஜ மாதங்கியாம் மீநாக்ஷீ அன்னை. தன்னைப் பற்றிய இந்நூலை சரியாக, ஸ்ரீ மஹா பெரிவாள் ட்ரஸ்டின் ஒன்பதாவது நூலாக-நவமமலராக- அலர்த்தியிருப்பதில் நவ நவமாய் பூக்கும் தன் லீலா விலாசத்தைக் காட்டிக் கருணை பொழிகிறாள்.

★ ★ ★

உ

# श्री मीनाक्षीस्तुतिमञ्जरी

## श्री हालास्यमाहात्म्यं च

# ஸ்ரீ மீனாக்ஷீ ஸ்துதிமஞ்ஜரீ

## ஸ்ரீ ஹாலாஸ்யமாஹாத்ம்யம்

ஸ்ரீ மீனாக்ஷி, ஸ்ரீ ஸுந்தரேச்வரர் துதிகளும்
மதுரையின் பெருமையும் அடங்கியது

தொகுத்தவர்
வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரி
ஸ்ரீரங்கம்

வெளியிடுவோர்
ஸ்ரீ மஹாபெரியவாள் ட்ரஸ்ட்
பெங்களூர் - 560 054

பார்த்திவ ஸ்ரீ 2005

SRI MINAKSHI STUTI MANJARI
and
SRI HALASYA MAHATMYAM

First Edition : 2005

Compiled by Vaidya S.V. Radhakrishna Sastri

Copies available at :
Smt. P. VIJAYA
Door No. 11, Plot No.7, Ganapathy Street,
St. Thomas Nagar, Madipakkam,
Chennai - 600 091

Price Rs. 280/-

Published by
Sri Mahaperiyaval Trust
Gurukripa, 94, I.T.I. Layout,
M.S.R.I.T.
Bangalore - 560 054.

Lasertypeset & Printed by :
V.K.N. ENTERPRISES
8/1, Dr. Rangachari Rd., Mylapore, Chennai-4 Ph: 24950775

# ஒன்பதாவது மலர்

பரமபூஜ்யஸ்ரீ மஹாபெரியவாள் ஸ்ரீபாதாளின் பேரருளுடன் பகவத்விபூதி மிக்க துதிகள் நாமாவளிகள் ஸ்தலப்பெருமைகள் பற்றிய பழைய நூல்களை வெளியிடத் தொடங்கிய பெங்களூரிலுள்ள ஸ்ரீ மஹாபெரியவரள் டிரஸ்ட் ஸ்ரீ மஹாபெரியவாளின் கருணை ஒன்றையே மூல சக்தியாக்கிக் கொண்டு, ஸ்ரீதேவீ நாம ஸ்தோத்திர மஞ்ஜரீ, தேவீ நாமாவளீ மஞ்ஜரீ, ஸ்ரீவாஞ்சிய க்ஷேத்ர மாஹாத்ம்யம், ஸ்ரீநடராஜநாம மஞ்ஜரீ, ஸ்ரீநடராஜ ஸ்தவமஞ்ஜரீ, ஸ்ரீ பாலாஸபர்யாபத்ததி, ஸ்ரீ சிவநாம மஞ்ஜரீ, துர்வாஸ மஹர்ஷியின் ஸ்துதி த்ரயீ என்ற நூல்களைத் தொடர்ந்து ஸ்ரீ மீனாக்ஷீ ஸ்துதி மஞ்ஜரியும் ஹாலாஸ்ய மாஹாத்ம்யமும் இணைந்த ஒன்பதாவது நூலை ஸ்ரீ மஹாபெரியவாளின் பூஜ்ய ஸ்ரீ சரணங்களில் பெருமகிழ்ச்சியும் பக்திப்பரவசமும் நிறைந்த உள்ளத்துடன் ஸமர்ப்பிக்கிறது.

இவற்றைத் தொகுத்துத்தரமுன் வந்த இவனுக்கும் பரமபூஜ்ய ஸ்ரீமஹாபெரியவாளும் பூஜ்ய ஸ்ரீ காமகோடி பீடத்து ஆசார்ய ஸ்ரீ சரணாளும் உள்ளத்திலும் கண்களிலும் கரங்களிலும் ஞானக்ரியா சக்திகளை ஊக்குவித்து உள்ளம் நிரம்பிய பணியாக இதனை நடத்திக்கொடுத்துள்ளனர். பாரத பூமியின் துவாத சாந்த ஸ்தானமாக ஹாலாஸ்யம் என்ற மதுரை மிக மிக முக்கிய ஸ்தலமாகத் துலங்குகிறது. பூலோக கைலாஸமான இங்கு பரமேச்வரன் எல்லா க்ஷேத்திரகளுக்கும் மூலலிங்கமாகக் காட்சிதருகிறார். அன்னை மீனாக்ஷி இந்த க்ஷேத்திரத்தில் வேள்வித்தீயில் தடாதகையாக மூன்று வயதுப் பாலையாக பெற்றோரான மலயத்வஜ பாண்டியனும் காஞ்சன மாலையும் புரிந்த மாதவப் பயனாகத்தோன்றி ஸௌந்தரராகத் தோன்றிய ஈசனை மணக்கிறாள். பலகோடிபிரும்மாண்டங்களின் படைப்பாளரான ஈசன் பாண்டிய நாட்டின் அரசனாகத் தன்னைக்காட்டிக் கொண்ட புண்ய பூமி மதுரை.

புராணங்களும் ஆகமங்களும் போற்றுகின்றவாறு ஸ்தல மகிமை, தீர்த்த மஹிமை, லிங்க மஹிமை என்ற மூன்றையும் ஒருங்கே பெற்றது மதுரை. அடியார்களின் விருப்பங்களை

அருட்பார்வையால் வழங்குகிற காமாக்ஷியும், மிகவும் பேதைகளான சிசுக்களுக்குப் பார்வையாலேயே அமுதூட்டி அணைத்து வளர்க்கின்ற தாயான மீனாக்ஷியும் தமிழ் நாட்டின் தனிப்பெரும் தெய்வங்கள். ராஜராஜேச்வரியாக ஸ்ரீலலிதையாக அறம் வளர்த்த நாயகியாகக் காமாக்ஷி கோலோச்சுகிறாள். மீனாக்ஷியோ பஞ்சதசாக்ஷரியான திரிபுரஸுந்தரியாக மஹாஷோடசியான மஹாத்ரிபுரஸுந்தரியாக, பாலையாக, புவனேச்வரியாக ராஜமாதங்கியாக, ராஜ சியாமளையாக, வேளைக்கு ஒரு காட்சி தந்து கொண்டே எல்லாம் ஒருமித்த பராசக்தி மீனாக்ஷியாகவும் கோலோச்சுகிறாள். அன்னை காமாக்ஷியை லலிதையாகவும், மீனாக்ஷியை மந்திரிணீ தேவியாகவும் அகிலாண்டேச்வரியை வாராஹியாகவும் முனிவர்கள் கண்டு வழிபட்டனர் என்பர். எல்லாமானவள் எவ்வடிவிலும் தனித்துக் காட்சி தருகிறாள் என்பதே அனுபவம்.

ஆகமங்கள் துதியாகத் தந்த மாதங்கீஸ்துதி, அகஸ்தியர் அருளிய யோக மீனாக்ஷீஸ்தோத்திரம், ஸ்ரீ சங்கர பகவத் பாதர் இயற்றிய ஸ்ரீ மீனாக்ஷீ பஞ்சரத்னம், மீனாக்ஷி ஸ்தோத்திரம், மணிமாலாஷ்டகம், கதம்பவனவாஸிநீ ஸ்தோத்திரம், சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடத்து ஆசார்யர்களான பூஜ்ய ஸ்ரீ சந்திர சேகர பாரதீ ஸ்வாமி பாதர்களியற்றிய மீனாக்ஷீ ஸ்தோத்திரம், மீனாக்ஷீ ஸ்துதி, காளிதாஸரின் சியாமளா நவரத்ன மாலிகா, சியாமளா தண்டகம், நீலகண்ட தீக்ஷிதரின் ஆனந்த ஸாகர ஸ்தவம், ம்ருத்பரண லீலாஸ்துதி, சதுஷ்ஷஷ்டி லீலாஸ்துதி, ஸ்ரீ அநந்தாநந்த நாதரின் மீனாக்ஷீ ஸுப்ரபாதம், உமாநந்த நாதரின் சியாமா ஸபர்யாமுறை, லகுபூஜாமுறை. அஷ்டோத்தர சத நாமவளி என்றிவை தேவியைப் பற்றியவை.

ஸ்காந்தபுராணத்தின் சங்கர ஸம்ஹிதையின் ஒரு பகுதியான அகஸ்திய ஸம்ஹிதையில் அகஸ்தியருக்கும் வஸிஷ்டர் முதலான காசியிலிருந்த முனிவர்களுக்குமிடையே நிகழ்ந்த உரையாடலாக ஹாலாஸ்யம் என்ற மதுரையின் பெருமை 6300 சுலோகங்கள் கொண்ட 71 அத்தியாயங்களாக இதில் இடம் பெறுகிறது. முதலில் உள்ள 1-4 அத்தியாயங்களில் முன்னுரையும் 19-20 அத்தியாயங்களில் ஸோமவாரவிரதமும்

71ம் அத்தியாயத்தில் மாஹாத்ம்யம் கேட்பதால் பெறும் நற்பலனுரையும் இடம் பெறுகின்றன. மற்றுமுள்ள 64 அத்தியாயங்களில் மதுரையம்பதியிலும் அதனைச் சுற்றியுள்ள இடங்களிலும் இறைவன் நிகழ்த்திய அறுபத்து நான்கு லீலைகளை அகஸ்தியர் விளக்குகிறார். இவற்றில் பலவற்றில் அகஸ்தியருக்கும் பங்குண்டு. இந்தத் திருவிளையாடல்களில் அருள்புரிந்த திருவாலவாயரசரான ஸுந்தரேசரை அடியார்கள் பாடியுள்ளனர். ஸுந்தரேசுவரரையும் மீனாக்ஷீதேவியையும் தனித்தும் இணைத்தும் துதித்த பல துதிகள் இதில் இடம் பெறுகின்றன.

இதனைக் கிரந்தலிபியில் சுமார் நூறாண்டுகளுக்கு முன் ஸ்ரீ குரு ஸ்வாமி சாஸ்திரி, ஸ்ரீ ராஜ கோபாலராயர் என்ற இருவர் சுவடிகளைச் சோதித்து அச்சிட்டனர். திருவிளை யாடல் புராணம் எனத்தமிழ் மொழியில் பல பெரியோர்கள் இந்த லீலைகளைப் பாடியுள்ளனர். ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் மதுரையில் நாயக்கர் அரசர்களின் மந்திரியாயிருந்தவர் சிவ லீலார்ணவம் என்ற மிக அழகிய காவியத்தில் இந்த வரலாறுகளை அவருக்கே தனித்துள்ளபாணியில் வர்ணித்துள்ளார்.

ஸ்ரீமீனாக்ஷியைப் பக்தியுடன் உபாசித்த தீக்ஷிதர் ஆனந்த ஸாகரஸ்தவம் என்றதுதியை இயற்றியுள்ளார். தேவியுடன் ஒருபக்தன் ஸல்லாபம் செய்யும் அழகையும் அவரது ஆழ்ந்த இறைதத்துவத்தைப் பற்றிய புலமையையும் இதில் காணலாம்.

காளிதாஸன் தேவியைக் காளியாக வழிப்பட்டான் என்பது வரலாறு. சியாமளா நவரத்ன மாலிகையிலும் சியாமளா தண்டகத்திலும் தேவியை சியாமளையாகக் காண்பதைக் காணமுடிகிறது. மதங்கர் என்ற மாமுனிவர் காடுகளில் வனவாசிகளுடன் இணைந்து வாழ்ந்தவர். தேவியும் வேடுவப்பெண்ணாக மயில்தோகையும் சங்கு மாலையும் பூண்டு மதங்கரது மகளாக வேட்டுவப்பெண்களுடன் வீணையில் பாடி ஆடி மகிழ்ந்தாள் என்பர். இவளே ராஜசியாமளா, ராஜமாதங்கி, மாதங்கி, சியாமளா, சுகசியாமளா, லலிதா தேவியின் மந்திரிணியான மந்திரிணீ என்ற பல பெயர்களில்

உபாஸிக்கபெறுபவள். மதங்கரின் புதல்வர் மாதங்கர் என்ற முனிவர். அவர் மந்திரிணியை வழிபட்டு வந்தார். அவர் ஹிமவானின் நண்பர். இருவரும் விளையாடும் போது தான் கௌரியின் தந்தை என்ற சிறப்புக்குரியவன்; மாதங்கர் அவ்வாறல்ல என்ற குறையை இமவான் கூற, மாதங்கர், மந்திரிணீ தேவியிடம் இக்குறை தீரவேண்ட, சியாமா, லகுசியாமா என்ற பெயர்களுடன் மந்திரிணீ தேவி மாதங்கரின் பெண்ணாகப்பிறந்தாள். அவளுக்குக் கோடிக்கணக்கான தோழிகளுண்டு. அவர்களுக்கும் சியாமா என்றே பெயர். கடம்புக் காட்டில் லீலைபுரிந்த மாதங்கிக்கு அந்தத் தோழிகள் அங்கசக்திகளாகத் திகழ்ந்தனர் என்று பிரும்ஹாண்ட புராணம் ஸ்ரீ லலிதோபாக்கியானத்தில் வரலாறு உண்டு. (அத்தியாயம் 31.)

பண்டனை அழிக்க வந்த ஸ்ரீ லலிதா தேவி தான் ஒருவளே பல சக்திதேவிகளாக மாறினாள். தேவியின் இடதுகையிலிருந்த கரும்பு வில்லிலிருந்து தோன்றியவள் மந்திரிணீ. கரும்புவில் மனத்தத்துவத்தின் உருவகம். இச்சா-ஜ்ஞானசக்திகளின் உருவகமே மனம். தேவியின் இச்சா ஜ்ஞான சக்திகளாகத் துலங்குபவள் மந்திரிணீ. இவளே ராஜ சியாமளையாக ராஜமாதங்கியாகத் துலங்குபவள். இவள் ஸங்கீதரஸிகை. வீணையில் பாடுபவள். கிளி அவள் கையில் அமர்ந்து அதனைக்கேட்கும். வேதம் அதன் உருவகம். தனுர்வேதம் வேதத்தின் ஒரு பகுதி, இந்தக் கிளியே போரில் வில்லும் அம்பும் ஆகும். ஸ்ரீ லலிதாதேவியின் பரிவார அமைப்பில் தேவிக்கு அடுத்த ஸ்தானம் இவளுக்கு உண்டு. ஆளும் சக்தியில் மந்திராலோசனை முதலிடம் பெறும். தேவிக்கு மந்திராலோசனை தருபவள் இவள். தேவியே மந்திரிணியாகவும் உள்ளாள் என்பதும் நினைவிற்கொள்ளத்தக்கது. போரிடுகையில் இவளுக்கான தேர் கேய சக்ரரதம். அதன் சக்கிரம் உருளுகையில் பாட்டு கேட்கும். பாட்டில் மயங்கி எதிரிப்படை உணர்வை இழக்கும். உள்ளத்திற்கு உல்லாஸம் தருகிற கானமே உயிரைப்பறிக்கிறது. மந்திரிணியின் உளமறிந்து கானமும் செயல்படுகிறது.

தேவி மதுரையில் மனோன்மணி சக்தியாகத் துலங்குகிறாள். ஸாதகனின் மனம் யோகத்தால் கட்டுப்பட்டு ஸங்கல்பமோ விகல்பமோ தோன்றாதபடி விஷயங்களில் பற்றற்று தியானிப்பவன், தியானிக்கப் பெறும் பொருள், தியானம் என்று திரிபுடி தோன்றாமல்

ஆத்மாவை நோக்கித் திரும்பி அதை அடைந்து அதனுள் லயமடைகிறது. இந்நிலையில் நிற்பதில் ஏங்கித் தொடர்ந்து இடையறாது உயர்ந்த மன நிலையை இந்த தேவி அருள்கிறாள்-ஞானியாக, சிறந்த கவியாக, யோகியாக பிரும்ம ஆத்ம ஐக்கிய அனுஸந்தானத்தில்லயித்தவனாகத் தேவி அவனிடம் மாற்றத்தைத் தருபவள்.

புருவ நடுவிலுள்ள ஆஜ்ஞாசக்ரம் வரை எழுந்த குண்டலினீ சக்தி பிரும்ம ரந்திரத்தின் கீழ் அமைந்துள்ள துவாதசாந்தத்தில் சக்தியின் ஸூக்ஷ்ம நிலைகளாகிய அர்த்த சந்திரம், ரோதினீ, நாதம், நாதாந்தம், சக்தி, வியாபிகா, ஸமநா என்ற எனபற்றைத்தாண்டிய உன்மனா என்ற கடை நிலையில் இவள் வசிப்பவளானதால் இவள் மனோன்மணி.

புராணம் உலகை நமது அறிவுக்கண்களில் இவ்வாறு புலப்படுத்துகிறது. உலகம் ஒரு காட்சிப்பொருள். தோன்றுவதும் மறைவதும் வகைவகையாகக் காட்சி தருவதும் அதன் இயல்பு. மறைவது என்பது இதுகாறும் கண்டிருந்த நிலையில் இல்லாதது, தோன்றுவது என்பது புலப்படா திருந்த நிலையிலிருந்து புலப்படும் நிலைக்கு வருவது. முற்றிலும் இல்லாமையோ புது இருக்கையோ இதற்குக் கிடையாது. மலை வெளித்தாக்குதலால் பொடியாகி மணலாகிறது. மணல் இறுகிப்பாறையாகிறது. ஸ்தூலமான உலகம் இறுக்கம் குலைந்து தனித்தனி அணுவணுவாய்ப்பிரிந்து மறுபடிக் கூடி இறுகி உலகமாக வெளிப்படுகிறது.

இந்தத் தோற்றத்திற்கும் மறைவிற்கும் காட்சிக்கும் ஆதாரமானதை சிவன்-சக்தி, பிரும்மம்-சக்தி, பிரும்மம்-மாயை, விஷ்ணு-மாயை என்றவாறு சொல்லுக்கு உட்படுத்திப்புராணம் விளக்கும். அது தானே தன்னை வெளிப்படுத்திக் கொள்ள எடுக்கும் முதல் உருவகம் பிந்து-சுழி. பிந்துவில் இயக்கம் தொடங்கியதும் வட்டமாக இருந்தது நீள் வட்டமாகிறது. அதனை லிங்கம் என்பர். இவ்வாறு அது தானே தன்னை அடையாளம் காட்டிக்கொள்கிறது. மற்றவை தோன்றா திருக்கும் போது, தோன்றுவதைக் காண்பவன் இல்லாதபோது, அதன் உருவகம் ஸ்வாயம்புவ லிங்கம்.

காண்பவரின் எண்ணிக்கை பெருகி, அவர்களுக்கு மூலப்பொருளைக்காண்கிற நாட்டத்தில் தீவிரம் வலுக்க இந்த லிங்கம் அவர்கள் பார்வையில்படுகிறது. அதனைப் பக்தியுடன் அணுகி ஆராய ஸுந்தரராக ஸுந்தரியாக ஸகுணவடிவமாகத் தோன்றுகிறது. அவர்களது சிரத்தை விரிவடைய, கோவில், மதிற்சுவர், வீதி நகரம் என்ற வெளித்தோற்றமும் கர்ப்பக்ருஹம் இறைவடிவம் என்ற உட்தோற்றமும் காண்பவர், காணப்படுபவர், காட்சி என்ற திரிபுடியும் இடம் பெறுகின்றன. மறைந்த உலகம் மறுபடி அவ்வாறே ஒரே சீராக வளர்ச்சி பெற்றுக்காட்சிக்கு உட்படுகிறது.சிவமும் சக்தியுமே தம்மையும் இக்காட்சி நிலைக்கு க்கொணர, பல ஸகுண வடிவங்களைப்பெறுவர். மலயத்வஜன். காஞ்சன மாலை தம்பதிக்கு மகளாகத் தடாதகையாகத் தோன்றுபவள் மீனாக்ஷியாகப் பல தோற்றங்கள் எடுத்த சக்தியே. தடாதகைக்கு முன்னரும் அவள் மீனாக்ஷியே. தடாதகையாக இருந்தவளும் மீனாக்ஷியே. தடாதகை என்ற தோற்றத்தை மறைத்துக்கொண்டபின்னரும் மீனாக்ஷியே. இவ்வாறு தான் மந்திரிணியாக, ராஜமாதங்கியாக, பார்வதியாக, தக்ஷனின் மகளான ஸதியாகத் தோன்றியதும் மீனாக்ஷியே. காஞ்சன மாலை முன்பிறவியில் வித்யாவதி என்ற விசுவாவஸு என்பவரின் மகள். தேவியைத் தன் மகளாகப்பெறத்தவமிருக்கிறாள்.(ஹா.மா. அத் 8)ஹிமவானும் மேனையுமே மலயத்வஜராகவும் காஞ்சன மாலையாகவும் பிறந்தனர் என ப்ரச்சன்ன ஸ்ரீ புரமகாத்மியத்தில் வரலாறு உள்ளது. சக்தி தானே தேவியாகத் தோன்றுவது உண்டு. தக்ஷன் இமவான் காத்யாயனர் முதலிய பல மகான்கள் இவள் தோன்றப் பெற்றோராகின்ற பாக்கியம் பெற்றவர்களாகின்றனர்.

அவள் ஸ்ரீவித்யை என்ற மஹாமந்திரத்திற்கும் தேவியாவாள். ஸ்ரீ லலிதா பரமேச்வரி தனக்கென அமைத்துக் கொண்ட நகரம் ஸ்ரீபுரம்., மேருவின் உயர்ந்த சிகரத்தில் அமைந்தது. மீனாக்ஷியாக அவள் வெளிப்படத்தேர்ந்தெடுத்த இடம் மதுரை. அப்போது மதுரையும் ஸ்ரீபுரமாகி விடுவதை ப்ரச்சன்ன ஸ்ரீபுர மாஹாத்ம்யம் விளக்குகிறது.உலகம் பாவனையால் உண்டாவது என்பர். அந்தப்பாவனை ஸமாதியில் உணரத்தக்க அதில் காஞ்சி மதுரை திருவானைக் காவல் காசி என்ற அனைத்து புனிதத்தலங்களும் ஸ்ரீ

நகரமாகிவிடுகின்றன. மதுரையின் ஆடி- ஆவணி- சித்திரை வீதிகள் ஸ்ரீ நகர ஆவரண வீதிகளாவதை முனிவர்கள் தம்பாவனையில் கண்டுள்ளனர்.

உலைகவிட்டு என்றும் அந்த ஆதார நிலை தனித்திருப்பதில்லை. உலகமாகக் காட்சிதரும் போது ஆதார நிலை மறைகிறது. அது புலப்படுவதில்லை. அது உலகம் மறைந்ததும் புலப்படுகிறது.உலகமாகக் காட்சி தரும் போதே வெகுசிலர் அந்த ஆதாரநிலையையும் காண்பதுண்டு. அவர்களே யோகிகளும் ஜ்ஞானிகளும். மனிதர்களையும் தேவர்களையுமே காண்பவராக, காண்கிற தகுதியுள்ளவராகக் கருதுவர். பறவைகளும் மிருகங்களும் தாவரங்களும் அத்தகுதி பெருதவர் எனக்கருதுவதுண்டு. இது தவருன கருத்து, மனிதரும் தேவரும் காண்பதற்குமுன்னரே பசுக்களும் பறவைகளும் இறை நிலையை உணர்ந்து மனிதனுக்கு இறைதத்துவம் அங்குள்ளதை விளக்குவதாக வரலாறுகள் பல உண்டு. ஒரு பசு அந்த இடத்தில் சென்று தன்னிச்சையாகப் பாலைப்பெருக்கும். ஸுந்தரர் ஸ்வயம்பு லிங்கமாகக் கடம்பம் காட்டில் உள்ளதை பச்சைக்கிளிகளும் பஞ்சவர்ணக்கிளிகளும் **சிவ சம்ப்போ மஹாதேவ பரமேச்வர சங்கர சந்திரசேகர பூதேச ஸாம்ப ஸ்ரீ கண்ட்ட சாச்வத** எனத்தேவதேவன் ஆணையிட்டபபடி கூவி அடையாளம் காட்டுகின்றன. (ஹாலாஸ்யமாஹாத்ம்யம்அத்யாயம் 5. ச்லோ 26.) இப்படி ஈனப்பிறவிகள் என மனிதன் கருதும் பிராணிகள் எளிதில் இறைவனைக்கண்டு கொள்கின்றன.

காலமும் தேசமும் பொருளும் மஹாகாலம் எனும் உலகைக் கட்டுப்படுத்துகிற சக்திக்குக் கட்டுப்பட்டு ஒரே சீராகப் பகலும் இரவும் போல் தோற்றத்தையும் மறைவையும் நிகழ்த்துகின்றன. இன்றைய மதுரை நகரம், மீனுக்ஷி ஸுந்தரரேச்வர ஆலயம் பசுமலை, பரங்குன்றம், அழகர் கோயில், திருவேடகம், திருப்பூவணம் என்ற நூற்றுக்கணக்கான இடங்கள் தேவியும் தேவனும் பாமர மக்களிடையே மஹான்களின் தவப்பயனுக நடமாடியவை. கோயிலின் அமைப்பும் தெய்வ ஸந்நிதிகளும் ஒவ்வொரு நூற்ருண்டிலும் புதுமை பெற்றிருக்கக்கூடும். தாயின் வயிற்றிலிருந்து வெளியான ஜீவன் வாழ்நாட்களில் பல முற்றிலும் புதிய மாறுதல்

களுக்கு உட்பட்டிருந்தாலும் அதே நான் என்ற எண்ணம் தொடர்வது போல, கடம்பக்காடாகியிருந்த இடம் தான், குலசேகர பாண்டியன் தன் தலைநகரமாகக் கொண்டது தான், இன்றும் மதுரை எனத்தன்னை அடையாளம் காட்டிக்கொள்கிறது.

தேவியும் தேவனும் கொண்டதோற்றங்கள் பல. எனினும் அவை அவர்களது அந்தந்தந்த காலத்திற்கேற்ற வேஷம் என்றோ கோலம் என்றோ கொள்ளும் போது எல்லையற்ற காலவரைக்கும் தேசவரைக்கும் அப்பாற்பட்டும் உட்பட்டும் அந்த ஆதார சக்தி இலங்குவதைத் தியான நிலையில் காணலாம்.

அதற்கு உதவவே இந்தத் தொகுப்பு. சொல்லுக்கும் அடங்காத பொருளைத்தன் தவப்பயனுகச் சொல்லுக்கு அகஸ்தியர் பகவத்பாத சங்கரர் முதலிய பெரியோர்கள் உட்படுத்தித்தந்துள்ளனர். கரையானைப் போன்று எதனையும் அரித்து மக்கச் செய்கிற இயற்கை. அம்மஹான்களின் சொல்லைப்பனை ஓலையாக ஏடாகத் தாங்கி அழியாமல் நம்வரை கொண்டு தந்துள்ளது. அதைப்பாதுகாத்து நம் ஸந்ததியரும் அந்தப்பெரு நிதியைப் பெற்றனுபவிக்க வசதி செய்வது நம் கடமை. இறையருள் நம்மை அதில் பயன்படுத்தியது நாம் செய்த பெரும்பாக்கியம்.

நம்ஸந்ததியர் இறையருளால் நம்மை விடச்சிறந்த கர்மயோகியராக இதனைப்படித்து உணர்ந்து இறையருளின் விசித்திரப்போக்கை நன்கு உணர்ந்து இனிது வாழட்டும்.

பரம பூஜ்ய ஸ்ரீ மஹாபெரியவாளின் அருளைப்பெறுவதொன்றையே குறிக்கோளாக்கி கொண்ட இந்த டிரஸ்ட், தொடர்ந்து இத்தகைய பணியில் ஈடுபட ஆர்வம் கொண்டுள்ளது. அதன் ஆர்வம் நற்பணியாக மலரட்டும்.

S.V. ராதா கிருஷ்ணசாஸ்திரி.
தொகுப்பாளர்.

22. வீரேச்வரம்,
அப்ரோச்ரோடு,
ஸ்ரீரங்கம் 620006.
12-8-2005. Ph:0431–2432564

# विषयानुक्रमणिका

अनुबन्धः

# श्रीमीनाक्षीस्तुतिमञ्जरी

## मातङ्गीस्तुतिः

मातङ्गि मातरीशे मधुमदमथनाराधिते महामाये ।
मोहिनि मोहप्रमथिनि मन्मथमथनप्रिये नमस्तेऽस्तु ॥ १ ॥

स्तुतिषु तव देवि विधिरपि पिहितमतिर्भवति विहितमतिः ।
तदपि तु भक्तिर्मामपि भवतीं स्तोतुं विलोभयति ॥ २ ॥

यतिजनहृदयनिवासे वासववरदे वराङ्गि मातङ्गि ।
वीणावादविनोदिनि नारदगीते नमो देवि ॥ ३ ॥

देवि प्रसीद सुन्दरि पीनस्तनि कम्बुकण्ठि घनकेशि ।
मातङ्गि विद्रुमौष्ठि स्मितमुग्धाक्ष्यम्ब मौक्तिकाभरणे ॥ ४ ॥

भरणे त्रिविष्टपस्य प्रभवसि तत एव भैरवी त्वमसि ।
त्वद्भक्तिलब्धविभवो भवति क्षुद्रोऽपि भुवनपतिः ॥ ५ ॥

पतितः कृपणो मूकोऽप्यम्ब भवत्याः प्रसादलेशेन ।
पूज्यः सुभगो वाग्मी भवति जडश्चापि सर्वज्ञः ॥ ६ ॥

ज्ञानात्मिके जगन्मयि निरञ्जने नित्यशुद्धपदे ।
निर्वाणरूपिणि शिवे त्रिपुरे शरणं प्रपन्नस्त्वाम् ॥ ७ ॥

त्वां मनसि क्षणमपि यो ध्यायति मुक्तामणीवृतां श्यामाम् ।
तस्य जगत्त्रितयेऽस्मिन् कास्ताः ननु याः स्त्रियोऽसाध्याः ॥ ८ ॥

साध्याक्षरेण गर्भितपञ्चनवत्यक्षराश्रिते मातः ।
भगवति मातङ्गीश्वरि नमोऽस्तु तुभ्यं महादेवि ॥ ९ ॥

विद्याधरसुरकिन्नरगुह्यकगन्धर्वयक्षसिद्धवरैः ।
आराधिते नमस्ते प्रसीद कृपयैव मातङ्गि ॥ १० ॥

वीणावादनवेलानर्तदलाबुस्थगित वामकुचाम् ।
श्यामलकोमलगात्रीं पाटलनयनां स्मरामि त्वाम् ॥ ११ ॥

अवटुतटघटितचूलीताडिततालीपलाशताटङ्काम् ।
वीणावादनवेलाकम्पितशिरसं नमामि मातङ्गीम् ॥ १२ ॥

माता मरकतश्यामा मातङ्गी मदशालिनी ।
कटाक्षयतु कल्याणी कदम्बवनवासिनी ॥ १३ ॥

वामे विस्तृतिशालिनि स्तनतटे विन्यस्तवीणामुखं
तन्त्रीं तारविराविणीमसकलैरास्फालयन्ती नखैः ।
अर्धोन्मीलदपाङ्गमंसवलितग्रीवं मुखं बिभ्रती
माया काचन मोहिनी विजयते मातङ्गकन्यामयी ॥ १४ ॥

वीणावाद्यविनोदगीत(नैक)निरतां लीलाशुकोल्लासिनीं
विम्बोष्ठीं नवयावकार्द्रचरणामाकीर्णकेशालिकाम् (वलिम्) ।
हृद्याङ्गीं सितशङ्खकुण्डलधरां शृङ्गारवेषोज्ज्वलां
मातङ्गीं प्रणतोऽस्मि सुस्मितमुखीं देवीं शुकश्यामलाम्॥ १५ ॥

स्रस्तं केसरदामभिः वलयितं धम्मिल्लमाबिभ्रती
तालीपत्रपुटान्तरेषु घटितैस्ताटङ्किनी मौक्तिकैः ।
मूले कल्पतरोर्महामणिमये सिंहासने मोहिनी
काचिद्गायनदेवता विजयते वीणावती वासना ॥ १६ ॥

वेणीमूलविराजितेन्दुशकलां वीणानिनादप्रियां
क्षोणीपालसुरेन्द्रपन्नगवरैराराधिताङ्घ्रिद्वयाम् ।
एणीचञ्चललोचनां सुवसनां वाणीं पुराणोज्ज्वलां
श्रोणीभारभरालसामनिमिषः पश्यामि विश्वेश्वरीम् ॥१७॥

मातङ्गीस्तुतिरियमन्वहं प्रजप्ता
जन्तूनां वितरति कौशलं क्रियासु।
वाग्मित्वं श्रियमधिकाञ्च गानशक्तिं
सौभाग्यं नृपतिभिरर्चनीयताञ्च ॥ १८ ॥

(मन्त्रकोशात:)

*—*—*

अगस्त्यकृतं

# श्रीयोगमीनाक्षी स्तोत्रम्

शिवानन्द - पीयूष - रत्नाकरस्थां
शिव - ब्रह्म - विष्ण्वामरेशाभि - वन्द्याम्।
शिवध्यान लग्नां शिवज्ञानमूर्तिं
शिवाख्यामतीतां भजे पाण्ड्य बालाम् ॥ १ ॥

शिवादि स्फुरत्पञ्चमञ्चाधिरूढां
धनुर्बाणपाशांकुशोद्भासि हस्ताम्।
नवीनार्क वर्णां नवीनेन्दुचूडां
परब्रह्मपत्नीं भजे पाण्ड्यबालाम् ॥ २ ॥

किरीटाङ्गदोद्भासि - मांगल्य - सूत्रां
स्फुरन्मेखला-हार-ताटंक-भूषाम्।
परामन्त्रकां पाण्ड्य सिंहासनस्थां
परंधामरूपां भजे पाण्ड्य बालाम् ॥ ३ ॥

ललामांचित-स्निग्ध- फालेन्दु भागां
लसन्नीरजोत्फुल्ल-कल्हार-संस्थाम्।

ललाटेक्षणार्धाङ्ग-लग्नोज्ज्वलांगीम्
परंधामरूपां भजे पाण्ड्य बालाम्।। ४ ।।

त्रिखण्डात्म विद्यां त्रिबिन्दु स्वरूपां
त्रिकोणे लसन्तीं त्रिलोकावनम्राम्।
त्रिबीजाधिरूढां त्रिमूर्त्यात्म विद्यां
परब्रह्मपत्नीं भजे पाण्ड्य बालाम्।। ५ ।।

सदा बिन्दुमध्योल्लसद्वेणि-रम्यां
समुत्तुङ्ग वक्षोज भारावनम्राम्।
क्वणन्नूपुरोपेत-लाक्षारसार्द्र-
स्फुरत्-पादपद्मां भजे पाण्ड्य-बालाम् ।। ६ ।।

यमाद्यष्ट-योगाङ्ग-रूपां-अरूपां
अकारात्-क्षकारान्त वर्णां अवर्णाम्।
अखण्डां अनन्यां अचिन्त्यां अलक्ष्यां
अमेयात्म-विद्यां भजे पाण्ड्य-बालाम् ।। ७ ।।

सुधासागरान्ते मणिद्वीप-मध्ये
लसत्कल्प वृक्षोज्ज्वलद्बिन्दुचक्रे।
महायोग पीठे शिवाकार मंचे
सदा सन्निषण्णां भजे पाण्ड्य बालाम्।। ८ ।।

सुषुम्नान्त रंध्रे सहस्रार पद्मे
रवीन्द्वग्नि संयुक्त चिच्चक्रमध्ये।
सुधामण्डलस्थे सुनिर्वाणपीठे
सदा सञ्चरन्तीं भजे पाण्ड्य बालाम्।। ९ ।।

षडन्ते नवान्ते लसद् द्वादशान्ते
महाबिन्दुमध्ये सुनादान्तराले।

शिवाख्ये कलातीत निश्शब्द देशे
सदा सञ्चरन्तीं भजे पाण्ड्य बालाम् ॥ १० ॥

चतुर्मार्ग मध्ये सुकोणान्तरङ्गे
खरन्ध्रे सुधाकार कूपान्तराले ।
निरालंब पद्मे कलाषोडशान्ते
सदा सञ्चरन्तीं भजे पाण्ड्य-बालाम् ॥ ११ ॥

पुट द्वन्द्व निर्मुक्त वायुप्रलीन-
प्रकाशान्तराले ध्रुवोपेतरम्ये ।
महाषोडशान्ते मनोनाश देशे
सदा सञ्चरन्तीं भजे पाण्ड्य-बालाम् ॥ १२॥

चतुःपत्रमध्ये सुकोणत्रयान्ते
त्रिमूर्त्याधिवासे त्रिमार्गान्तराले ।
सहस्रार पद्मोचितां चित्प्रकाश-
प्रवाहप्रलीनां भजे पाण्ड्य बालाम् ॥ १३ ॥

लसद्द्वादशान्तेन्दु पीयूषधारा-
वृतां मूर्तिमानन्द मग्नान्तरङ्गाम् ।
परां त्रिस्तनीं तां चतुष्कूट-मध्ये
परन्धामरूपां भजे पाण्ड्य बालाम् ॥ १४ ॥

सहस्रारपद्मे सुषुम्नान्त-मार्गे
स्फुरच्चन्द्र पीयूष धारां पिबन्तीम् ।
सदा स्रावयन्तीं सुधामुक्तिमंबाम्
परंज्योतिरूपां भजे पाण्ड्य बालाम् ॥ १५ ॥

नमस्ते सदा पाण्ड्य राजेन्द्र कन्ये
नमस्ते सदा सुन्दरेशाङ्क वासे ।
नमस्ते नमस्ते सुमीनाक्षि देवि
नमस्ते नमस्ते नमस्ते नमोऽस्तु ॥ १६ ॥

*___*___*

श्रीशङ्करभगवत्पाद कृतम्

## ॥ मीनाक्षीपञ्चरत्नम् ॥

उद्यद्भानुसहस्रकोटिसदृशां केयूरहारोज्ज्वलां
बिम्बोष्ठीं स्मितदन्तपङ्क्तिरुचिरां पीताम्बरालंकृताम् ।
विष्णुब्रह्मसुरेन्द्रसेवितपदां तत्त्वस्वरूपां शिवां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम् ॥ १ ॥

मुक्ताहारलसत्किरीटरुचिरां पूर्णेन्दुवक्त्रप्रभां
शिञ्जन्नूपुरकिंकिणीमणिधरां पद्मप्रभाभासुराम् ।
सर्वाभीष्टफलप्रदां गिरिसुतां वाणीरमासेवितां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम् ॥ २ ॥

श्रीविद्यां शिववामभागनिलयां ह्रींकारमन्त्रोज्ज्वलां
श्रीचक्राङ्कितबिन्दुमध्यवसतिं श्रीमत्सभानायकीम् ।
श्रीमत्षण्मुखविघ्नराजजननीं श्रीमज्जगन्मोहिनीं
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम् ॥ ३ ॥

श्रीमत्सुन्दरनायिकां भयहरां ज्ञानप्रदां निर्मलां
श्यामाभां कमलासनार्चितपदां नारायणस्यानुजाम् ।
वीणावेणुमृदङ्गवाद्यरसिकां नानाविधाडम्बिकां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम् ॥ ४ ॥

नानायोगिमुनीन्द्रहृन्निवसतिं नानार्थसिद्धिप्रदां
नानापुष्पविराजिताङ्घ्रियुगलां नारायणेनार्चिताम्।
नादब्रह्ममयीं परात्परतरां नानार्थतत्त्वात्मिकां
मीनाक्षीं प्रणतोऽस्मि सन्ततमहं कारुण्यवारांनिधिम्॥ ५॥

श्रीशङ्करभगवत्पादकृतम्

## ॥ मीनाक्षीस्तोत्रम्॥

श्रीविद्ये शिववाम भागनिलये श्रीराजराजार्चिते
श्रीनाथादिगुरु स्वरूपविभवे चिन्तामणीपीठिके।
श्रीवाणीगिरिजानुताङ्घ्रिकमले श्रीशांभवि श्रीशिवे
मध्याह्ने मलयध्वजाधिपसुते मां पाहि मीनाम्बिके॥ १॥

चक्रस्थेऽचपले चराचरजगन्नाथे जगत्पूजिते
आर्तालीवरदे नताभयकरे वक्षोजभारान्विते।
विद्ये वेदकलापमौलिविदिते विद्युल्लताविग्रहे
मातः पूर्णसुधारसार्द्रहृदये मां पाहि मीनाम्बिके॥ २॥

कोटीराङ्गदरत्नकुण्डलधरे कोदण्डबाणाञ्चिते
कोकाकारकुचद्वयोपरिलसत्प्रालम्बहाराञ्चिते।
शिञ्जन्नूपुरपादसारसमणीश्रीपादुकालंकृते
मद्दारिद्र्यभुजंगगारुडखगे मां पाहि मीनाम्बिके॥ ३॥

ब्रह्मेशाच्युतगीयमानचरिते प्रेतासनान्तःस्थिते
पाशोदङ्कुशचापबाणकलिते बालेन्दुचूडाञ्चिते।
बाले बालकुरङ्गलोलनयने बालार्ककोट्युज्ज्वले
मुद्राराधितदैवते मुनिसुते मां पाहि मीनाम्बिके॥ ४॥

गन्धर्वामरयक्षपन्नगनुते गङ्गाधरालिङ्गिते
    गायत्रीगरुडासने कमलजे सुश्यामले सुस्थिते।
खातीते खलदारुपावकशिखे खद्योतकोट्युज्वले
    मन्त्राराधितदैवते मुनिसुते मां पाहि मीनाम्बिके॥ ५॥

नादे नारदतुम्बुराद्यविनुते नादान्तनादात्मिके
    नित्ये नीललतात्मिके निरुपमे नीवारशूकोपमे।
कान्ते कामकले कदम्बनिलये कामेश्वराङ्कस्थिते
    मद्विद्ये मदभीष्टकल्पलतिके मां पाहि मीनाम्बिके॥ ६॥

वीणानादनिमीलितार्धनयने विस्रस्तचूलीभरे
    ताम्बूलारुणपल्लवाधरयुते ताटङ्कहारान्विते।
श्यामे चन्द्रकलावतंसकलिते कस्तूरिकाफालिके
    पूर्णे पूर्णकलाभिरामवदने मां पाहि मीनाम्बिके॥ ७॥

शब्दब्रह्ममयी चराचरमयी ज्योतिर्मयी वाङ्मयी
    नित्यानन्दमयी निरञ्जनमयी तत्त्वंमयी चिन्मयी।
तत्त्वातीतमयी परात्परमयी मायामयी श्रीमयी
    सर्वैश्वर्यमयी सदाशिवमयी मां पाहि मीनाम्बिके॥ ८॥

*—*—*

श्रीशङ्करभगवत्पादकृतं

## श्रीमीनाक्षीमणिमालाष्टकम्

मधुरापुरनायिके नमस्ते
    मधुरालापिशुकाभिरामहस्ते।
मलयध्वजपाण्ड्यराजकन्ये
    मयि मीनाक्षि कृपां विधेहि धन्ये॥ १॥

कचनिर्जितकालमेघकान्ते
कमलासेवितपादपङ्कजान्ते ।
मधुरापुरवल्लभेष्टकान्ते
मयि मीनाक्षि दयां विधेहि शान्ते ॥ २ ॥

कुचयुग्मविधूतचक्रवाके
कृपया पालितसर्वजीवलोके ।
मलयध्वजसंततेः पताके
मयि मीनाक्षि कृपां निधेहि पाके ॥ ३ ॥

विधिवाहनजेतृकेलियाने
विमतामोटनपूजितापदाने ।
मधुरेक्षणभावपूतमीने
मयि मीनाक्षि कृपां विधेहि दीने ॥ ४ ॥

तपनीयपयोजिनीतटस्थे
तुहिनप्रायमहीधरोदरस्थे ।
मदनारिपरिग्रहे कृतार्थे
मयि मीनाक्षि कृपां निधेहि सार्थे ॥ ५ ॥

कलकीरकलोक्तिनाददक्षे
कलितानेकजगन्निवासिरक्षे ।
मदनाशुगहल्लकान्तपाणे
मयि मीनाक्षि कृपां कुरु प्रवीणे ॥ ६ ॥

मधुवैरिविरिञ्चिमुख्यसेव्ये
मनसा भावितचन्द्रमौलिसव्ये ।
तरसा परिपूतयज्ञहव्ये
मयि मीनाक्षि कृपां विधेहि भव्ये ॥ ७ ॥

जगदम्ब कदम्बमूलवासे
कमलामोदमुखेन्दुमन्दहासे ।
मदमन्दिरचारुदृग्विलासे
मयि मीनाक्षि कृपां निधेहि दासे ॥ ८ ॥

पठतामनिशं प्रभातकाले
मणिमालाष्टकमष्टभूतिदायि ।
घटिकाशतचातुरीं प्रदद्यात्
करुणापूर्णकटाक्षसन्निवेशात् ॥ ९ ॥

* * *

॥ श्रीः ॥

श्री चन्द्रशेखरभारतीश्रीचरणकृता

# ॥ श्रीमीनाक्षीस्तुतिः ॥

अद्राक्षं बहुभाग्यतो गुरुवरैः संपूज्यमानां मुदा
फुल्लन्मल्लिमुखप्रसूननिवहैर्हालास्यनाथप्रियाम् ।
वीणावेणुमृदङ्गनादमुदितामेणाङ्कबिम्बाननां
काणादादिसमस्तशास्त्रमतिदां शोणाधरां श्यामलाम् ॥ १॥

मातङ्गकुम्भविजयिस्तनभारभुग्न-
मध्यां मदारुणविलोचनवश्यकान्ताम् ।
ताम्राधरस्फुरितहासविधूततार-
राजप्रवालसुषमां भज मीननेत्राम् ॥ २ ॥

आपादमस्तकदयारसपूरपूर्णां
शापायुधोत्तमसमर्चितपादपद्माम् ।

चापायितेक्षुं अमलीमसचित्ततायै
नीपाटवीविहरणां भज मीननेत्राम्॥ ३ ॥

कंदर्पवैर्यपि यया सविलासहास-
नेत्रावलोकनवशीकृतमानसोऽभूत्।
तां सर्वदा सकलमोहनरूपवेषां
मोहान्धकारहरणां भज मीननेत्राम् ॥ ४ ॥

अद्यापि यत्पुरगतः सकलोऽपि जन्तुः
क्षुत्तृड्व्यथाविरहितः प्रसुवेव बालः।
संपोष्यते करुणया भजकार्तिहन्त्रीं
भक्त्याऽन्वहं हृदय तां भज मीननेत्राम् ॥ ५ ॥

हालास्यनाथदयिते करुणापयोधे
बालं विलोलमनसं करुणैकपात्रम्।
वीक्षस्व मां लघु दयोर्मिलदृष्टिपातैः
मातर्न मेऽस्ति भुवने गतिरन्तरा त्वाम् ॥ ६ ॥

श्रुत्युक्तकर्मनिवहाकरणाद्विशुद्धिः
चित्तस्य नास्ति मम चञ्चलतानिवृत्त्यै।
कुर्यां किमम्ब मनसः सकलाघशान्त्यै
मातस्त्वदङ्घ्रिभजनं सततं दयस्व ॥ ७ ॥

त्वद्रूपदेशिकवरैः सततं विभाव्यं
चिद्रूपमादिनिधनान्तरहीनमम्ब।
भद्रावहं प्रणमतां सकलाघहन्तृ
त्वद्रूपमेव मम हृत्कमले विभातु ॥ ८ ॥

* * *

॥ श्रीः ॥

श्रीचन्द्रशेखरभारतीश्रीचरणकृतम्

# ॥ श्रीमीनाक्षीस्तोत्रम् ॥

मन्दस्मितोदञ्चितमञ्जुलास्यां कनन्निटालां वरकुङ्कुमेन ।
श्रीसुन्दरेशेन समं निशीथे प्रेङ्खाधिरूढां भज मीननेत्राम् ॥ १ ॥

दविष्ठलोकांश्च दयोर्मिलेन विलोकनेनैव विशालनेत्रा ।
मत्स्या इवार्भान्परिपालयन्ती डोलाविहारं तनुते झषाक्षी ॥ २ ॥

कृत्वा तपो दुश्चरमम्बिकायाः
माता भवामीति मनीषया या ।
प्राप्ता पुरा काञ्चनमालया सा
पाण्ड्याधिराज्ञी वितनोतु भव्यम् ॥ ३ ॥

दिव्यं रूपं दधाना ललिततररवैर्वेणुवीणादिजातैः
प्रापय्यान्तर्मुखत्वं निखिलजनमनांस्यात्मरूपं विवेक्तुम् ।
वृत्तीर्मोदादिरूपा अपि परिगलिताः कुर्वती ब्रह्मविद्या
मीनाक्षी जीवनीडं सुखममृतमहो बोधयन्ती विभाति ॥ ४ ॥

प्रेङ्खामारुह्य पत्या सह सुररमणीगर्वनिर्वापिकाभिः
नारीभिर्गीयमाना नवनवनटनैस्तोष्यमाणा च नित्यम् ।
आनन्दं देवभोग्यं धिगिति सुमनसामादधाना विरक्तिं
सान्द्रानन्दं महेशं परममृतमहो बोधयत्यम्बिकेयम् ॥ ५ ॥

या देवी द्वादशान्ते वसति विशदया प्रज्ञयैवाधिगम्या
यस्याः प्राप्त्यै विधत्ते श्रुतिरपि विविधान् यज्ञदानादिधर्मान् ।
साक्षाच्छ्रीमीननेत्रा मघवदधिगता कुम्भजाद्यर्चिताङ्घ्रिः
सा मे सोमावतंसा शिथिलयतु तमो हार्दमाशु प्रगाढम् ॥ ६

यस्या गेहं विशालं पुरमिव सकलं वस्तुजातं बिभर्ति
यद्दृष्ट्वैवाशु मोदं वहति भुवि जनो नास्तिकोऽपि प्रकामम्।
स्तम्भैर्हैमैर्विचित्रैरपि शिखरवरैर्गोपुरैः शौकनीडैः
तीर्थैर्हैमाम्बुजिन्यादिभिरपि परितो भासमानं श्रियै स्तात् ॥ ७॥

सा हि श्रीरमृता सतामिति ऋचः सामानि यस्माद्यजूं-
ष्याम्नायो विदधाति तत्परशिवे मीनाक्षि विद्यां त्रयीम्।
संबोध्यामृतसौख्यहेतुमचिराद्व्याजभव्यां दयां
नित्यं धेहि सुते जगज्जननि ते भूयोऽपि भूयो नमः ॥ ८॥

शफरनयने शान्ताराध्ये शिवार्धशरीरिणि
प्रचुरय सुखं दुःखं सर्वं विनाशय सत्वरम्।
सफलय जनिं सक्तिं देहे निराकुरु सद्घने
चितिसुखतनावात्मन्यास्तां मतिर्मम संततम्॥ ९॥

* * *

श्रीकालिदासकृता

## श्यामला नवरत्नमालिका

ओंकार-पंजर-शुकीं उपनिषदुद्यान-केलि कल-कण्ठीम्।
आगम विपिन मयूरीं आर्यामन्तर्विभावये गौरीम्॥ १॥

*ஓங்காரமெனும் காட்டினுள் உள்ள பெண்கிளி, உபநிஷத்பூங்காவில் விளையாடுகிற பெண்குயில், வேதமெனும் காட்டிலுள்ள பெண்மயில், அந்த பெருமதிப்புக்குரிய கௌரியை உள்ளத்தில் உருவகப் படுத்திக்கொள்கிறேன் (1)*

दयमान दीर्घ नयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम्।
वामकुच निहित वीणां वरदां संगीत मातृकां वन्दे ॥ २॥

*பரிவுகாட்டுகிற நீண்ட கண்களுள்ளவள். குருவாகி வழிகாட்டி சிறந்த நல்வாழ்வுமுறையைக் காட்டுபவள். இடது ஸ்தனத்தின் மீது வீணையை வைத்திருப்பவள், விரும்பியதை அளிப்பவள். ஸங்கீதத்தின் தாய், அவளை வணங்குகிறேன். (2)*

**श्यामतनु सौकुमार्यां सौन्दर्यानन्द संपदुन्मेषाम् ।**
**तरुणिमकरुणापूरां मदजल कल्लोल लोचनां वन्दे ॥ ३ ॥**

*கருநீல உடலழகு கொண்டவள்(யௌவனப்பருவத்து உடலழகு கொண்டவள்) அழகையும் ஆனந்தநிறைவையும் வெளியே காட்டுபவள். பெருக்கெடுத்து ஓடும் யௌவனமும் பரிவும் கொண்டவள். மதநீரின் அலை வீசும்கண்கள் உள்ளவள். அவளை வணங்குகிறேன். (3)*

**नख मुख मुखरित वीणा नाद रसास्वाद नवनवोल्लासम् ।**
**मुखमंब मोदयतु मां मुक्ता-ताटङ्क -मुग्ध-हसितं ते ॥ ४ ॥**

*தாயே ! நகத்தின் நுனியால் மீட்டப்பெற்ற வீணையின் ஒலியின் இனிமையைச் சுவைத்தலால் புதிது புதிதாகக் காட்சி தருகிற உனது முகம், முத்துக்காதணி கொண்டது, எளிமை நிரம்பிய புன்சிரிப்பு கொண்டது. அது என்னை மகிழச் செய்யட்டும். (4)*

**सरिगमपधनिरतां तां वीणा संक्रान्त कान्त हस्तां ताम् ।**
**शान्तां मृदुल-स्वान्तां कुचभर-तान्तां नमामि शिवकान्ताम् ॥ ५ ॥**

*அவள் சிவனது இனிய மனைவி, ஸரிகமபதநி என்ற ஸ்வரங்களில் ஈடுபட்டவள். வீணையில் பரவியசைகிற அழகிய கைகள் உள்ளவள். மன அமைதிபெற்றவள், மென்மைமிக்க உள்ளம் கொண்டவள், மார்பகத்தின் சுமையால் குனிந்தவள். அவளை வணங்குகிறேன். (5)*

**अवटुतट-घटित-चूली-ताडित-ताली-पलाश-ताटङ्काम् ।**
**वीणावादन-वेलाकंपित-शिरसं नमामि मातंगीम् ॥ ६ ॥**

*பிடரிப்பகுதியில் இணைக்கப்பெற்ற கூந்தல் பின்னல் காதணியான பனை ஓலையாலான தாடங்கத்தில் மோத, வீணை வாசிக்கும்போது தலையை அசைப்பவள். மதங்கரின் பெண்ணான அவளை வணங்குகிறேன். (6)*

**वीणारवानुषंगं विकचमुखांभोज माधुरी भृंगम्।**
**करुणापूर तरंगं कलये मातङ्गकन्यकापाङ्गम् ॥ ७ ॥**

*வீணையின் ஒலிக்கேற்ப அசைவதும், மலர்ந்த முகத்தாமரையின் தேனைப்பருக வந்த வண்டும், கருணைப்பிரவாஹத்தின் அலை பாய்வதுமான மதங்கரின் பெண்ணின் கடைவிழியை உள்ளத்தில் உருவகப் படுத்துகிறேன். (7)*

**मणिभङ्ग-मेचकाङ्गीं मातङ्गीं नौमि सिद्धमातङ्गीम्।**
**यौवन-वन सारङ्गीं सङ्गीतांभोरुहानुभव-भृङ्गीम् ॥ ८ ॥**

*இரத்தின ஒளிச்சிதறல் போன்று மின்னுகிற உடலமைப்பு கொண்டவளும், யௌவனப்பருவமெனும் காட்டிலுள்ள பெண்மானும், சங்கீதமெனும் தாமரையைச் சூழ்ந்தனுபவிக்கிற வண்டு போன்றவளுமான ஸித்த மதங்கரின் பெண்ணான மாதங்கியை வணங்குகிறேன். (8)*

**मेचकमासेचनकं मिथ्यादृष्टान्त मध्य भागं ते।**
**मातस्तव स्वरूपं मङ्गलसङ्गीत सौरभं मन्ये ॥ ९ ॥**

*தாயே ! உன் வடிவம் கறுத்தது, உள்ளத்தைக் குளிர்விப்பது, இருப்பும் இல்லாமையும் கலந்த நிலைக்கு உதாரணமாகிற இடுப்புப்பகுதி கொண்டது. மங்களமான ஸங்கீதத்தின் நறுமணத்தின் உருவகம் என அதனைக் கருதுகிறேன். (9)*

**नवरत्नमाल्यमेतद्रचितं मातङ्गकन्यकाभरणम्।**
**यः पठति भक्तियुक्तः स भवेद् वागीश्वरः साक्षात् ॥ १० ॥**

*மாதங்ககுமாரியின் ஆபரணமாகப் புனையப்பட்ட இந்த நவரத்ன மாலையைப் பக்தியுடன் படிப்பவர் வாக்கின் ஈசராவார். (10)*

कालिदास कृतम्

# श्यामलादण्डकम्

माणिक्यवीणामुपलालयन्तीं
मदालसां मञ्जुलवाग्विलासाम्।
माहेन्द्रनीलद्युतिकोमलाङ्गीं
मातङ्गकन्यां मनसा स्मरामि॥ १॥

*மாணிக்கம் என்ற சிகப்பு ரத்தினக் கற்கள் பதிக்கப்பெற்ற வீணையை அணைத்து வருடிக் கொண்டு இருப்பவளும் (விளையாட்டாக மீட்டிக் கொண்டிருப்பவளும்) (யௌவனத்தால் ஏற்பட்ட) மதர்ப்பால் சோம்பி நிற்பவளும் இனிய பேச்சுள்ளவளும் இந்திரநீலக்கல் எனும் நீலநிற ரத்தினக் கற்களின் ஒளிகொண்ட மென்மைமிக்க வடிவமைப்பு கொண்டவளுமான மதங்க முனிவரின் பெண்ணுகப் பிறந்த சியாமளாதேவியை மனத்தால் நினைக்கிறேன்.।*

चतुर्भुजे चन्द्रकलावतंसे कुचोन्नते कुङ्कुमराग शोणे।
पुण्ड्रेक्षुपाशाङ्कुशपुष्पबाणहस्ते नमस्ते जगदेकमातः॥ २॥

*நான்கு கைகளுள்ளவளே! சந்திரனின் கலையை (பகுதியை)த் தலையணியாகக் கொண்டவளே! ஸ்தனங்களால் நிமிர்ந்து நிற்பவளே! குங்குமப்பூவின் செந்நிறத்தால் சிவந்தவளே! (குங்குமப்பூவின் பூச்சால் சிவந்தவளே) கரும்பாலான வில், பாசம், துறட்டி, பூ அம்பு இவைகளைக் கைகளில் உடையவளே ! உலகின் ஒரே அன்னையே ! உனக்கு வணக்கம்.*

माता मरकतश्यामा मातङ्गी मदशालिनी।
कटाक्षयतु कल्याणी कदम्बवनवासिनी॥ ३॥

*தாயானவள், மரகதம் எனும் பச்சை நிறத்து ரத்தினம் போன்ற பசுமைமிக்க நிறம் கொண்டவள். மதங்க முனிவரின் பெண். எப்போதும் மதர்ப்பு நிறைந்திருப்பவள். மங்களமே வடிவானவள். கடம்பு மரங்கள் நிறைந்த காட்டில் வசிப்பவள். இத்தகைய சியாமளா தேவி கடைக்கண் பார்வையால் பார்க்கட்டும்.*

**जय मातङ्गतनये जय नीलोत्पलद्युते ।**
**जय सङ्गीतरसिके जय लीलाशुकप्रिये ॥ ४ ॥**

*மதங்கரின் பெண்ணே ! வெற்றியடைவாயாக! நீலநிற அல்லிப்பூவின் ஒளியுள்ளவளே ! வெற்றியடைவாயாக! ஸங்கீதத்தைச் சுவைத்து இன்புறுபவளே ! வெற்றி யடைவாயாக! விளையாட்டாகக் (கையில் ஏந்தியுள்ள) கிளியிடம் அன்பு கொண்டவளே ! வெற்றியடைவாயாக !*

**जय जननि ! सुधा समुद्रान्तरुद्यन् मणिद्वीप संरूढ-बिल्वाटवीमध्यकल्पद्रुमाकल्प कादम्बकान्तार वासप्रिये कृत्तिवासःप्रिये सर्वलोक प्रिये ।**

*தாயே ! அமிருதநீர் நிரம்பிய கடலின் நடுவே தோன்றியுள்ள சிந்தாமணி என்ற நினைத்ததை வழங்கும் ரத்தினக் கற்களாலான தீவில் முளைத்த வில்வமரக் காட்டின் இடையில் உள்ள கல்பகமரங்களைச் சுற்றிலும் அணியாகக் கொண்ட கடம்புமரக் காட்டில் வசிப்பதில் பிரிய முள்ளவளே (அமுதக்கடல், அதன் நடுவே சிந்தாமணித் தீவு, அதில் வில்வக்காடு, அதற்கிடையே கல்பகமரக்காடு, அதன் நடுவே கடம்புமரக்காடு. அதில் வசிப்பவளே ! ) யானைத் தோலை ஆடையாகப் போர்த்திய சிவபெருமானிடம் அன்பு கொண்டவளே ! (யானை வடிவிலிருந்த கஜாஸுரனைக் சிவபெருமான் கொன்று அவனது தோலை ஆடையாகக் கொண்டார்). எல்லா உலகத்திடமும் பிரியமுள்ளவளே ! (எல்லா ஜீவராசிகளிடமும் பிரியமுள்ளவளே, எல்லா ஜீவராசிகளுக்கும் பிரியமானவளே) வெற்றிகொள்வாயாக.*

सादरारब्ध सङ्गीत सम्भावना सम्भ्रमालोल नीपस्रगाबद्ध चूली सनाथत्रिके सानुमत्पुत्रिके । शेखरीभूत शीतांशुरेखा मयूखावली बद्ध सुस्निग्ध नीलालकश्रेणिशृङ्गारिते लोकसंभाविते ।

*மிகவும் பரிவுடன் தொடங்கப்பட்ட கானத்தைப் பாராட்டுவதில் (ஏற்பட்ட) கடம்புப் பூவாலான மாலையால் சுற்றிக்கட்டப்பட்ட கூந்தல் முடிப்புடன் கூடிய கழுத்தின் பின்புறமுள்ளவளே ! (இரு தோள் எலும்புகளும் முதுகில் முள்ளந்தண்டெலும்பும் கூடுகின்ற கழுத்தின் பின்புறம்-பிடரி) இமவான் என்ற மலையின் பெண்ணே! (வெற்றிகொள்வாயாக என்பது ஒவ்வொரு வாக்கியத்தின் இறுதியிலும் சேரும்). தலையணியாக அமைந்த குளிர்ந்த கிரணங்கள் கொண்ட சந்திரனின் கலை (பகுதி)யிலிருந்து வெளியாகும் கிரணங்களின் வரிசையால் இணைக்கப்பெற்ற மிக வழவழப்புள்ள கருமையுள்ள நெற்றியில் தொங்கும் கேசச் சுருள் வரிசையால் அலங்கரிக்கப்பெற்றவளே (சந்திர கிரணங்களே நூலாகி முன்னுச்சி மயிர்ச்சுருளைச் சுற்றிக் கட்டியிருப்பதுபோல் தோன்றுகிறது. நெற்றியின் மேல் படர்ந்த முன்னுச்சி மயிர்ச் சுருளின்மேல் அஷ்டமி திதியன்று தோன்றும் பிறை சூடப்பட்டுள்ளது) உலகில் உயிரின மனைத்தாலும் பெருமதிப்புடன் பாராட்டப்பெற்றவளே.*

कामलीला धनुस्सन्निभ भ्रूलतापुष्प सन्दोह सन्देह कृल्लोचने वाक्सुधासेचने ।

*மன்மதனின் விளையாட்டு (அவன் கையில் ஏந்தியுள்ள) வில்லை ஒத்த புருவமாகிய கொடியின் பூங்கொத்துக்கள் என்று ஐயம் விளைவிக்கின்ற கண்களுள்ளவளே ! வாய்மொழியாகிய அமுதத்தை அடியார்கள் மீது தெளிப்பவளே !*

चारु गोरोचना पङ्क केली ललामाभिरामे सुरामे रमे !

*அழகிய கோரோசனைக்(யை அரைத்துக் குழப்பிய) குழம்புடன் சிறந்த விளையாட்டில் ஈடுபாடுள்ளவளே. சிறந்த அழகியே, லக்ஷ்மியே (மனத்தை ஈர்ப்பவளே).*

**प्रोल्लसद्वालिका मौक्तिकश्रेणिका चन्द्रिका मण्डलोद्भासि लावण्यगण्डस्थल न्यस्तकस्तूरिकापत्ररेखा समुद्भूत सौरभ्य संभ्रान्त भृङ्गाङ्गना गीतसान्द्रीभवन्मन्द्र तन्त्रीस्वरे सुस्वरे भास्वरे!**

*ஒளிர்கின்ற வாளி என்ற காதணியில் உள்ள முத்து வரிசைகளாகிற நிலவுக் குவியலால் சிறந்து ஒளிர்கின்ற அழகுடன் கூடிய கன்ன மேட்டில் வைக்கப்பட்ட கஸ்தூரியால் வரையப்பெற்ற கோடுகளில் இருந்து உண்டான மணத்தால் பரபரப்படைந்த பெண் வண்டுகளின் (ரீங்காரமாகிய) பாட்டுடன் இணைந்து கீழ் ஸ்தாயியில் ஒலிக்கும் வீணைத்தந்தியின் ஒலியுடன் கூடியவளே ! இனிய குரலுள்ளவளே ! ஒளிமிக்கவளே !*

**वल्लकी वादन प्रक्रिया लोल तालीदलाबद्धताटङ्क भूषा-विशेषान्विते सिद्धसंमानिते !**

*வீணை வாசிக்கும் முறையில் ஆடுகின்ற பனையின் ஓலையால் சுருட்டிக்கட்டப்பட்ட தாடங்கம் (காதோலை) எனும் சிறந்த அணியுடன் கூடியவளே ! ஸித்தர் எனும் தேவர் கூட்டத்தால் பாராட்டப்பெற்றவளே !*

**दिव्य हालामदोद्वेल हेलालसच्चक्षुरान्दोलन श्रीसमाक्षिप्त कर्णैक नीलोत्पले पूरिताशेष लोकाभिवाञ्छा फले श्रीफले !**

*தெய்வீகமான மதுவால் ஏற்பட்ட மதர்ப்பால் வரை மீறிய விளையாட்டால் ஒளிர்கின்ற கண்களின் அசைவின் அழகால் மங்கிய ஒளியுடன் கூடிய காதில் செருகப்பட்டுள்ள ஒற்றை நீல அல்லிப்பூ உள்ளவளே ! நிறைவுபெற்ற எல்லா ஜீவராசிகளது மேலான விருப்பங்களின் பயனுடன் கூடியவளே ! எல்லா மேன்மையையும் (தனது அருளிற்குப்) பலனாகக் கொண்டவளே !*

**स्वेद बिन्दूल्लसत्फाल लावण्य निष्यन्द सन्दोह सन्देह-कृन्नासिका मौक्तिके सर्वविश्वात्मिके कालिके !**

*வியர்வைத் துளிகளால் அழகுடன் விளங்குகின்ற நெற்றியின் அழகின் கசிவுப்பெருக்கென ஸந்தேகத்தை உண்டாக்குகிற மூக்கில் அணியப்பெற்ற முத்தணி கொண்டவளே ! அனைத்து உலக வடிவினளே ! கருநிறத்தவளே !*

**मुग्ध मन्दस्मितोदार वक्त्रस्फुरत्पूग तांबूलकर्पूर खण्डोत्करे ज्ञानमुद्राकरे सर्वसम्पत्करे पद्मभास्वत्करे !**

*பேதைமை நிரம்பிய புன்சிரிப்பால் பெருமைபெற்ற வாயில் விளங்குகின்ற பாக்கு வெற்றிலை பச்சைகர்பூரம் இவைகளின் சேர்க்கை கொண்டவளே ! ஞான முத்திரையுடன் கூடிய (வலது) கையுள்ளவளே ! (கட்டை விரலுடன் ஆட்காட்டி விரலை வளைத்து மற்ற மூன்று விரல்களை நிமிர்த்திக் காட்டுவது ஞானமுத்திரை-சின்முத்திரை எனப்படுவது) எல்லா நிறைவுதரும் செல்வங் களையும் உண்டாக்குபவளே ! தாமரையால் ஒளிகொண்ட கையுள்ளவளே ! (தாமரை போன்ற ஒளிகொண்ட கையுள்ளவளே)*

**कुन्दपुष्पद्युति स्निग्ध दन्तावली निर्मलालोल कल्लोल सम्मेलन स्मेरशोणाधरे चारुवीणाधरे पक्वबिंबाधरे !**

*முல்லைப்பூவின் ஒளிபோன்ற ஒளிகொண்ட நெய்ப்புள்ள பற்களின் வரிசையின் அழுக்கற்று அலைபாய்கின்ற ஒளியலையின் சேர்க்கையால் விரிந்த சிவந்த உதடுள்ளவளே ! அழகிய வீணையை ஏந்தியவளே ! நன்கு பழுத்த கோவைப்பழம் போன்ற (சிவந்த) உதடுள்ளவளே !*

**सुललित नवयौवनारम्भ चन्द्रोदयोद्वेल लावण्य दुग्धार्णवाविर्भवत्कम्बुबिब्वोक भृत्कन्धरे सत्कलामन्दिरे मन्थरे !**

*மிக மென்மையுள்ள புது வாலிபப்பருவத்தின் தொடக்கமாகிற சந்திரனின் உதயத்தால் கரைகடந்த*

*பேரழகால் பாற்கடலில் உண்டான சங்கிடம் தற்பெருமையுடன் பாராமுகமாயிருத்தலைக்கொண்ட கழுத்துள்ளவளே ! நல்ல கலைகளின் இருப்பிடமானவளே ! மெதுவான போக்குள்ளவளே !*

**दिव्यरत्नप्रभा बन्धुरच्छन्न वीरादिभूषा समुद्योतमाना-नवद्यांशु शोभे शुभे !**

*தெய்விகமானரத்தினங்களின் ஒளியால் அலைபாயும் சன்னவீரம் முதலிய ஆபரணங்களால் நன்கு விளங்குகின்ற குறையற்ற மேலாடையின் அழகுள்ளவளே! மங்கள மானவளே ! (சன்னவீரம் என்பது பூணூல்போன்று இடது தோளிலிருந்து வலது விலாப்புறம் வரையிலும் வலது தோளிலிருந்து இடது விலாப்புறம் வரையிலும் தொங்கும் தங்கச்சங்கிலி)*

**रत्नकेयूर रश्मिच्छटा पल्लवप्रोल्लसद्दोर्लता राजिते योगिभिः पूजिते !**

*ரத்னங்கள் பதித்த தோள்வளை எனும் தோளிலணியும் ஆபரணத்தின் ஒளிபளபளப்பாகிற தளிர்களால் நன்கு விளங்குகின்ற புஜங்களாகிற கொடிகளுடன் அழகுற விளங்குபவளே ! யோகிகளால் வணங்கப்பெற்றவளே !*

**विश्वदिङ्मण्डलव्यापि माणिक्यतेजः स्फुरत्कङ्कणालंकृते विभ्रमालंकृते साधकैः सत्कृते !**

*அனைத்துதிசை வளையங்களிலும் பரவுகின்ற சிகப்பு ரத்தினங்களின் ஒளியால் பளபளக்கின்ற கைவளைகளால் அழகுபெற்றவளே ! மயக்குகின்ற அணிகலன்க ளுள்ளவளே ! செயல் நிறைவுபெற முயல்பவர்களால் வழிபடப்பட்டவளே !*

**वासरारम्भ वेला समुज्जृम्भमाणारविन्द प्रतिद्वन्द्विपाणिद्वये सन्ततोद्यद्दये अद्वये !**

*நாளின் தொடக்க வேளையில் (காலைப்பொழுதில்) நன்கு மலர்கின்ற தாமரைக்குப் போட்டியான இருகைகள் உள்ளவளே ! இடைவிடாமல் வெளியாகும் பரிவுள்ளவளே ! வேறொன்றின்றி தனித்திருப்பவளே !*

**दिव्य रत्नोर्मिकादीधिति स्तोमसन्ध्यायमानांगुली पल्लवोद्यन्नखेन्दु प्रभामण्डले सन्नताखण्डले चित्प्रभामण्डले प्रोल्लसत्कुण्डले !**

*தெய்வீகமான ரத்தினங்கள் பதித்த மோதிரத்தின் ஒளிக்குவியலால் ஸந்தியாகாலமாக ஆகிவிட்ட (ஸந்தியா காலத்து வானம் போல் செந்நிறம்கொண்ட) துளிர்போன்ற (மென்மையான) விரல்களிலிருந்து வெளியாகின்ற நகமாகிய சந்திரனின் ஒளிமண்டலமுள்ளவளே ! வணங்கிக் கொண்டிருக்கும் இந்திரனுடன் கூடியவளே ! அறிவாகிய ஒளிவட்டம் கொண்டவளே ! மிக அழகாக விளங்குகின்ற குண்டலமெனும் காதணி கொண்டவளே !*

**तारकाराजिनीकाश हारावलिस्मेर चारुस्तनाभोग भारान-मन्मध्यवल्लीवलिच्छेद वीचीसमुल्लास सन्दर्शिताकार सौन्दर्य रत्नाकरे, वल्लकीभृत्करे, किंकर श्रीकरे !**

*நக்ஷத்திரங்களின் வரிசைக்கொப்பான ஹாரங்களின் வரிசையால் பெருமையுற்ற அழகிய இரு ஸ்தனங்களின் பருமனின் சுமையால் சிறிது உள்பக்கம் வளைந்த வயிற்று நடுவில் உள்ள கொடிபோன்ற மடிப்புகளின் அலை வரிசையின் தளதளப்பால் வெளிப்படுத்தப்பட்ட உருவமைப்பின் கடல்போன்ற அழகு உள்ளவளே ! வீணை ஏந்திய கைகளுள்ளவளே ! (தனக்குக்) குற்றேவல் புரிபவர்களுக்குச் செல்வச் செழிப்பை உண்டாக்குபவளே !*

**हेमकुंभोपमोत्तुङ्ग वक्षोज भारावनम्रे त्रिलोकावनम्रे ।**

*தங்கக்குடத்திற்கொப்பான மேடிட்ட மார்பகத்தின் சுமையால் குனிந்திருப்பவளே ! மூன்று உலகங்களாலும் வணங்கப்பெறுபவளே !*

**लसद्वृत्त गम्भीर नाभी सरस्तीर शैवाल शङ्काकर श्याम रोमावलीभूषणे मञ्जु सम्भाषणे !**

*அழகாக விளங்குகின்ற ஆழ்ந்த தொப்புளாகிற நீர்மடுவின் கரையில் உள்ள பாசியென்ற ஐயத்தை உண்டாக்குகிற கருத்தரோமவரிசையை அணியாகக் கொண்டவளே ! இனிய பேச்சுள்ளவளே !*

**चारु शिञ्जत्कटी सूत्र निर्भर्त्सितानङ्ग लीला धनुःशिञ्जिनीडम्बरे दिव्यरत्नांबरे !**

*இனிது கலீர் என ஒலிக்கின்ற அரை ஞாணால் அவமதிக்கப்பெற்ற மன்மதனின் விளையாட்டு வில்லின் நாண் ஒலியுடன் கூடியவளே ! தெய்வீகமான ரத்தினங்கள் பதித்த ஆடையுடன் கூடியவளே !*

**पद्मरागोल्लसन्मेखला भास्वर श्रोणि शोभा जित स्वर्ण-भूभृत्तले चन्द्रिकाशीतले !**

*பத்மராக (சிகப்பு) ரத்தினங்களால் அழகாக விளங்குகின்ற ஒட்டியாணத்தால் ஒளி கூடிய இடுப்பின் அழகால் வெல்லப்பட்ட தங்கமலையான மேருவின் அடித்தளம் உள்ளவளே (மேருவின் அடிவாரத்தை அழகால் வென்ற இடுப்பு உள்ளவளே) நிலவைப்போல் குளிர்ந்தவளே !*

**विकसित नव किंशुकाताम्र दिव्यांशुकच्छन्न चारूरुशोभा पराभूतसिन्दूर शोणायमानेन्द्र मातङ्ग हस्तार्गले, वैभवानर्गले श्यामले !**

*புதுப் புரசம்பூவைப்போல் நன்கு சிவந்த தெய்வீகப் பட்டாடையால் மறைக்கப்பட்ட அழகிய தொடைகளின் அழகால் அவமதிக்கப்பெற்ற செந்தூரம்போன்று சிவந்துள்ள இந்திரனின் யானையான ஐராவதத்தின் தாழ்ப்பாள் போன்ற துதிக்கை உடையவளே ! (ஐராவதத்தின்*

*துதிக்கை தாழ்ப்பாள் போன்று வலிவு மிக்கது, அது தேவியின் தொடைவனப்பைக் கண்டு வெட்கித் தலை குனியும்) பெருமையால் தடையற்றவளே ! சியாமளாதேவியே !*

**कोमल स्निग्ध नीलोत्पलोत्पादितानङ्ग तूणीर शङ्काकरोदार जङ्घालते चारुलीलागते !**

*மென்மையுள்ளதும் நெய்ப்புள்ளதுமான நீல நிறத்து நெய்தல் புஷ்பங்களால் உண்டாக்கப்பெற்ற மன்மதனின் அம்புறாத் தூணியோ என்ற ஐயத்தை உண்டாக்குகிற பெருமைமிக்க கொடிபோன்ற கணைக்கால்களுள்ளவளே ! அழகிய விளையாட்டு நடையுள்ளவளே !*

**नम्र दिक्पाल सीमन्तिनी कुन्तल स्निग्ध नील प्रभा पुञ्ज सञ्जात दूर्वांकुराशङ्क सारङ्ग संयोग रिंखन्नखेन्दूज्वले प्रोज्वले निर्मले !**

*வணங்குகின்ற திக்பாலர்களின் மனைவிகளின் கூந்தலின் மழமழப்பு உள்ள நீலநிற ஒலிப்பெருக்கால் அருகம் புல் தளிர்களோ என்று ஐயமடைந்த மானின் சேர்க்கையால் விளங்கும் நகங்களாகிற சந்திரனின் ஒளியால் ஒளிர்பவளே ! (தேவியின் கால் நகங்கள் சந்திரனைப்போல். தேவியைப் பெண்கள் வணங்கும்போது அவர்களது கூந்தல் நகங்களின் அருகே படுகின்றன. கூந்தலின் கருமை ஒளி நகத்தின்மேல் படும்போது அருகம்புல் போல் காணப்படுகின்றது. நகச்சந்திரனில் உள்ள மான்கள் அந்த ஒளியைப் புல்லெனத் தீண்டுன்றன) மிகவும் ஒளிர்பவளே ! அப்பழுக்கற்றவளே !*

**प्रह्व देवेश लक्ष्मीश भूतेश तोयेश वाणीश कीनाश दैत्येश यक्षेश वाय्वग्निकोटीर माणिक्य संघृष्ट बालातपोद्दाम लाक्षारसारुण्य तारुण्य लक्ष्मीगृहीतांघ्रि पद्मे सुपद्मे उमे !**

*வணங்கி நிற்கும் தேவர்களின் தலைவனுன இந்திரன், லக்ஷ்மியின் நாயகரான விஷ்ணு, பூதங்களின் தலைவரான சிவன் ஜலத்திற்கதிபதியான வருணன், ஸரஸ்வதியின் நாயகனுன பிரம்மா, யமன், அஸுரர்களின் தலைவனுன நிர்ருதி, யக்ஷர்களின் தலைவனுன குபேரன், வாயு, அக்னிதேவன் இவர்களது கிரீடத்திலுள்ள சிகப்பு ரத்னங்களால் உரசப் பெற்றதும் இளஞ்சூரிய ஒளியைவிட ஒளிமிக்கதான செம்பஞ்சுக் குழம்பின் சிவப்பால் இளமைபெற்றதும் லக்ஷ்மியால் ஏந்தப் பெற்றதுமான திருவடித் தாமரைகள் உள்ளவளே ! அழகிய லக்ஷ்மியாயிருப்பவளே ! உமையே !*

**सुरुचिर नव रत्न पीठस्थिते सुस्थिते, रत्नपद्मासने रत्नसिंहासने शङ्खपद्मद्वयोपाश्रिते !**

*மிக அழகிய ஒன்பது ரத்னங்களாலான பீடத்தில் அமர்ந்திருப்பவளே ! அழகுற அமர்ந்திருப்பவளே ! ரத்னத்தாலான தாமரையை ஆஸனமாகக் கொண்டவளே ! ரத்னத்தாலான சிங்கத்தை ஆஸனமாக்கொண்டவளே ! (சிங்காதனம் கொண்டவளே) சங்கநிதி பத்மநிதி என்ற இரண்டால் அருகில் அணுகப் பெற்றவளே !*

**तत्र विघ्नेश दुर्गा वटु क्षेत्रपालैर्युते मत्तमातङ्ग कन्या-समूहान्विते मञ्जुला मेनकाद्यङ्गना मानिते भैरवैरष्टभिर्वेष्टिते !**

*அங்கு விக்னேசுவரர், துர்க்கை, வடுகபைரவர், க்ஷேத்திரபாலர் இவர்களுடன் கூடியிருப்பவளே ! யௌவனச் செறுக்குற்ற மதங்க இனக்கன்னிக் கூட்டங்களுடன் கூடியவளே ! மஞ்சுளா மேனகா முதலிய அழகிகளால் பாராட்டப்பெற்றவளே ! எட்டு பைரவர்களால் சூழப்பட்டிருப்பவளே ! (அஸிதாங்கர், ருரு, சண்டர், க்ரோதர், உன்மத்தர், பீஷணர், கபாலர், ஸம்ஹாரர், என பைரவர் எட்டு)*

**देवि ! वामादिभिः शक्तिभिः सेविते, धात्रिलक्ष्म्यादि शक्त्यष्टकैः संयुते मातृकामण्डलैर्मण्डिते यक्षगन्धर्व सिद्धाङ्गना मण्डलैरर्चिते !**

*அலகிலா விளையாட்டுடையவளே ! வாமா முதலிய சக்திகளால் வழிபடப்பட்டவளே ! மாத்ருகா எனும் அக்ஷர சக்திகளின் கூட்டங்களால் அழகுற இருப்பவளே ! யக்ஷர், கந்தர்வர், ஸித்தர் இவர்களின் பெண்டிர் கூட்டத்தால் பூஜிக்கப்பெற்றவளே !*

*(வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ, அம்பிகா என்ற நான்கு சக்திகள், பிராம்மீ, (தாத்ரீ) மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்திரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மி என்று எட்டு மாத்ருசக்திகள். அ முதல் க்ஷ வரையிலான 51 உயிர்மெய் எழுத்துக்கள் ஒவ்வொன்றின் சக்திகளான மாத்ருகாமண்டலம்)*

**पञ्चबाणात्मिके, पञ्चबाणेन रत्या च सम्भाविते, प्रीति-भाजा वसन्तेन चानन्दिते !**

*(மன்மதனின்) ஐந்து பாணங்கள் (சக்தி) வடிவினளே ! மன்மதனாலும் ரதியாலும் பெரிதும் மதிக்கப்பட்டவளே ! அன்புபூண்ட (வஸந்தருதுவாகிய பருவத்தின் தேவதையான) வஸந்தனாலும் மகிழ்வூட்டப் பெற்றவளே !*

**भक्तिभाजां परं श्रेयसे कल्पसे, योगिनां मानसे द्योतसे, छन्दसामोजसा भ्राजसे !**

*பக்திபூண்டவர்களுக்குமட்டும் நன்மை புரிவதற்காக முனைகிறாய். யோகிகளின் மனத்தில் விளங்குகிறாய். வேதங்களின் பேரொளியால் பிரகாசிக்கிறாய்.*

**गीतविद्या विनोदातितृष्णेन कृष्णेन सम्पूज्यसे, भक्तिमच्चेतसा वेधसा स्तूयसे, विश्वहृद्येन वाद्येन विद्याधरैर्गीयसे !**

*சங்கீதக் கலையின் மூலம் மன மகிழ்ச்சி பெறுவதில் பெரிதும் ஆவல்கொண்ட கண்ணனால் நன்கு வழிபடப்பெறுகிறாய். பக்தியுள்ள உள்ளம் கொண்ட பிரம்மதேவனால் துதிக்கப்பெறுகிறாய். உலகினர் அனை வருக்கும் இதயத்திற்குகந்த (பிரியமான) வாத்தியத்துடன் வித்யாதரர் என்ற தேவர் இனத்தவரால் பாடப் பெறுகிறாய்.*

**श्रवणहरण दक्षिणक्काणया वीणया किन्नरैर्गीयसे, यक्षगन्धर्वसिद्धांगना मण्डलैरर्च्यसे, सर्वसौभाग्यवाञ्छा वतीभिर्वधूभिः सुराणां समाराध्यसे !**

*காதுகளைக் கவர்வதில் திறமை மிக்க ஒலி உள்ள வீணையுடன் கிந்நரர்களால் பாடப்பெறுகிறாய். யக்ஷர், கந்தர்வர் சித்தர் இவர்களின் பெண்டிர் கூட்டத்தால் வழிபடப்பெறுகிறாய். எல்லா ஸௌபாக்யங்களை (பெண்கள் விரும்பும் மேன்மைகளை)யும் பெற விருப்பமுள்ள தேவர்களின் மனைவியரால் திருப்தி வரும்வரை பூஜிக்கப்படுகிறாய்.*

**सर्वविद्याविशेषात्मकं चाटुगाथासमुच्चारणं, कण्ठमूलोल्ल-सद्वर्णराजित्रयं कोमलश्यामलोदारपक्षद्वयं तुण्डशोभातिदूरी-भवत्किंशुकं तं शुकं लालयन्ती परिक्रीडसे !**

*எல்லா கலைகளின் சிறப்பை வடிவமாகக் கொண்டதும் அழகிய கதைகளைக் கூறுவதும் கழுத்தின் அடியில் விளங்குகிற நிறம்மிக்க மூன்று கோடுகளைக் கொண்டதும் மென்மையான பசுமை நிறம்கொண்ட பெருமை மிக்க இரு இறக்கைகள் கொண்டதும் மூக்கின் அழகால் வெகுதூரத்தில் தள்ளப்பெற்ற புரசம்பூவைக் கொண்டதுமான அந்த (பெருமைபெற்ற) கிளியை கொஞ்சிக்கொண்டு விளையாடுகிறாய்.*

**पाणियुग्मद्वयेनाक्षमालामपि स्फाटिकीं ज्ञानसारात्मकं पुस्तकं चांकुशं पाशमाबिभ्रती येन सञ्चिन्त्यसे, तस्य वक्त्रान्तराद् गद्यपद्यात्मिका भारती निस्सरेत् !**

*தாமரைபோன்ற இருகைகளின் இரட்டையால் ஸ்படிகத்தாலான 51 மணிகள்கொண்ட மாலையையும் அறிவின் சாரமே வடிவான புத்தகத்தையும் துறட்டியையும் பாசக்கயிற்றையும் தாங்கியிருப்பவளாக எவனால் தியானிக்கப் பெறுகிறாயோ அவனது முக இடைவெளியிலிருந்து (வாயிலிருந்து) உரை நடை செய்யுள் வடிவிலுள்ள வாக்கு வெளிப்படும்.*

**येन वा यावकाभाकृतिर्भाव्यसे तस्य वश्या भवन्ति स्त्रियः पूरुषाः ।**

*எவன் ஒருவனால் செம்பஞ்சுக் குழம்புபோன்ற நிறமுள்ள வடிவமுள்ளவளாக தியானிக்கப்பெறுகிறாயோ அவனுக்கு பெண்களும் ஆண்களும் அடங்கியவர்களாக ஆவார்கள்.*

**येन वा शातकुम्भद्युतिर्भाव्यसे, सोऽपि लक्ष्मीसहस्रैः परिक्रीडते !**

*எவன் ஒருவனால் தங்க ஒளியுள்ளவளாக தியானிக்கப்பெறுகிறாயோ அவனும் ஆயிரக்கணக்கான லக்ஷ்மிகளுடன் விளையாடிக் கொண்டிருப்பான்.*

**किं न सिद्ध्येद्वपुः श्यामलं कोमलं चन्द्रचूडान्वितं तावकं ध्यायतः!**

*பசுமைநிறம் கொண்டதும் மென்மையுள்ளதும் சந்திர கலையைத் தலையில் கொண்டதுமான உனது உருவத்தை தியானிப்பவனுக்கு எதுதான் நிறைவுறாது ?*

**तस्य लीलासरो वारिधिः, तस्य केलीवनं नन्दनं, तस्य भद्रासनं भूतलं, तस्य गीर्देवता किंकरी, तस्य चाज्ञाकरी श्रीः स्वयम् !**

*கடல் அவனுக்குக் கேளிக்கைக் குளம் ஆகும். (தேவர்களின் தோட்டமாகிய) நந்தனம் அவனுக்கு*

விளையாட்டுத் தோட்டமாகும். பூமியின் பரப்பே அவனுக்கு அமரும் பலகையாகும். வாக்குத் தேவதையான ஸரஸ்வதி அவனுக்கு ஏவல் புரிபவள். லக்ஷ்மியும் தானே உத்திரவை நிறைவேற்றுபவளாக ஆவாள்.

**सर्वतीर्थात्मिके, सर्वमन्त्रात्मिके, सर्वतन्त्रात्मिके सर्वयन्त्रात्मिके, सर्वपीठात्मिके, सर्वतत्त्वात्मिके, सर्वशक्त्यात्मिके, सर्वविद्यात्मिके, सर्वयोगात्मिके, सर्वनादात्मिके, सर्वशब्दात्मिके, सर्वविश्वात्मिके, सर्वदीक्षात्मिके, सर्वसर्वात्मिके, सर्वगे, पाहि मां, पाहि मां, पाहि मां देवि, तुभ्यं नमो देवि, तुभ्यं नमो देवि, तुभ्यं नमः !!**

எல்லா தீர்த்தங்களின் வடிவில் உள்ளவளே ! (தீர்த்தம்-குரு, தெய்வீக சக்திமிக்க நீர்நிலைகள், பெரியோர்கள்) எல்லா மந்திரங்களின் வடிவினளே ! எல்லா வழிபாட்டு முறைகள் வடிவினளே ! எல்லா யந்திரங்கள் வடிவினளே ! எல்லா சக்தி பீடங்கள் வடிவினளே ! எல்லா உலக மூலதத்துவங்கள் வடிவினளே ! எல்லா சக்தி வடிவினளே ! எல்லா கல்வித்துறை வடிவினளே ! எல்லா ஆத்ம ஸாதனை முறை வடிவினளே ! எல்லா ஸூக்ஷ்ம ஒலி வடிவினளே ! எல்லா ஸ்தூல ஒலி வடிவினளே ! எல்லாத் தோன்றுகின்ற பொருள்கள் வடிவினளே ! எல்லா வழிபாட்டுத் தகுதி பெறுவதற்கான முறைகள் வடிவினளே ! எல்லாவற்றிற்கும் எல்லா மாயிருப்பவளே ! பரவி நிற்பவளே ! என்னைக் காப்பாற்றுவாய் ! என்னைக் காப்பாற்றுவாய் ! தேவியே ! என்னைக் காப்பாற்றுவாய் ! தேவி ! உனக்கு வணக்கம் தேவி ! உனக்கு வணக்கம், உனக்கு வணக்கம்.

★ ★ ★

|| श्रीः ||

श्रीनीलकण्ठदीक्षितकृतः

# || आनन्दसागरस्तवः ||

ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் இயற்றிய

## ஆனந்த ஸாகரஸ்தவம்

विज्ञापनार्हविरलावसरानवाप्त्या
मन्दोद्यमे मयि दवीयसि विश्वमातुः ।
अव्याजभूतकरुणापवनापविद्धा-
न्यन्तः स्मराम्यहमपाङ्गतरङ्गितानि ॥ १ ॥

*விண்ணப்பிப்பதற்குகந்த தனித்த வாய்ப்பு கிட்டாததால் நான் முயற்சி குன்றி தூரத்தில் ஒதுங்கியிருந்தேன். உலகின் அன்னையின் கருணை எனும் காற்று காரணமின்றி எழுந்து வீச, அவளது கடைக் கண்களின் ஒளி வீச்சு அலையாய் எழுந்து என்னை நோக்கி வந்தது. அவற்றை நினைவில் கொள்கிறேன். (1)*

आवेद्यतामविदितं किमथाप्यनुक्तं
वक्तव्यमान्तररुजोपशमाय नालम् ।
इत्यर्थ्यसे किमपि तच्छ्रवणे निधातुं
मातः प्रसीद मलयध्वजपाण्ड्यकन्ये ॥ २ ॥

*தாயே ! நீ அறியாததையா நான் சொல்லப்போகிறேன். ஆனால் சொல்ல வேண்டியதைச் சொல்லாதிருந்தால் உள்ளத்தில் சுமக்கிற வேதனை குறையாது. அதனால் ஏதோ நான் கூற வருவதைக் காதில் வாங்கிக்கொள்ள வேண்டுகிறேன். மலயத்துவஜ பாண்டியனின் மகளே ! அருள்புரிவாய். (2)*

आक्रन्दितं रुदितमाहतमानने वा
कस्यार्द्रमस्तु हृदयं किमतः फलं वा ।
यस्या मनो द्रवति या जगतां स्वतन्त्रा
तस्यास्तवाम्ब पुरतः कथयामि खेदम् ।। ३ ।।

*தாயே ! எனது கதறலாலும் புலம்பலாலும் முகத்தில் அடித்துக் கொள்வதாலும் எவரது உள்ளம் நெகிழும் ? அப்படி நெகிழ்ந்தாலும் என்ன நேரும் ? கருணையால் நெகிழ்கிற மனமுள்ளவளும் உயிரினமனைத்திற்கும் உதவத் தானே முன் வருபவளுமான தாயான உன் முன்னிலையில் என் துயரைத் தெரிவிக்கிறேன். (3)*

पर्याकुले मनसि वाचि परिस्खलन्त्यां
आवर्तगर्त इव चक्षुषि घूर्णमाने ।
कस्तेऽभिधास्यति शिवे मम तामवस्थां
काले दयस्व कथयामि तवाधुनैव ।। ४ ।।

*மங்களவடிவினளே ! என் இறுதிநிலையில் மனம் குழம்பும். பேச்சு குளறும். கண் குழி விழுந்து பார்வை அலையும். அந்நிலையில் எனக்காக யார் உன்னிடம் விண்ணப்பிப்பார் ? அதனால் இப்போதே தெரிவித்துக் கொள்கிறேன். பரிவு காட்டுவாய். (4)*

भक्तिं करोतु नितरां सुरजातिमात्रे
ग्रामीणजन्तुरिव पौरजनेषु लोकः ।
अन्यत्र देवि भवदीयपदारविन्दाद्
आकृष्यमाणमपि मे हृदयं न याति ।। ५ ।।

*தேவி ! உலகில் கிராமத்தான் பட்டினத்தானிடம் மரியாதை காட்டுவான். அது போல் மற்ற தேவர்களை அவர்கள் தேவர்களாக இருப்பதாலேயே சிலர் பக்தியுடன் அணுகக்கூடும். ஆனால் என் மனம் உன்னைவிட்டு வலிவில் அகற்றப்பட்டாலும் உன் திருவடிகளை விட்டகலாது. (5)*

अङ्गीकुरु त्वमवधीरय वा वयं तु
दासास्तवेति वचसैव जयेम लोकान् ।
एतावतैव सुकरो ननु विश्वमातः
उद्दण्डदण्डधरकिंकरमौलिभङ्गः ॥ ६ ॥

உலகின் அன்னையே ! நீ எங்களை ஏற்றுக் கொண்டாலும் உதறித் தள்ளினாலும் நாங்கள் உனது அடிமைகள். அவ்வாறு கூறிக்கொண்டே உலகை வெல்வோம். இத்தகைய பக்தியைக் கொண்டே யமகிங்கரர்களின் மண்டையை உடைப்பதும் எமக்கு மிக எளிது. (6)

वेदान्तवाक्यजनितं विमलं विचारैः
आसाद्य बोधमनुचिन्तनतोऽपरोक्षम् ।
मुक्तिं व्रजन्ति मनुजा इति सूक्तिमाद्यां
आलम्ब्य कस्तरितुमर्हति शैलकन्ये ॥ ७ ॥

மலைமகளே ! உபநிஷத வாக்கியங்களைக் கற்று ஆராய்ந்து தெளிந்து தொடர்ந்து உள்ளத்தில் ஆத்மாவை உணர்வதால் மட்டுமே மாந்தர் முக்திபெறுவர் என்ற வேதவசனத்தைச் சொல்வதால் மட்டும் எவன் கடைத்தேற முடியும்? (அதனைச் செயல்படுத்துவது எளிதல்ல. ) (7)

एकैकवेदविषयाः कति नाम शाखाः
तासां शिरांसि कति नाम पृथग्विधानि ।
अर्थावबोधविधुरोऽक्षरलाभ एव
केषां नृणां कतिभिरस्तु शरीरबन्धैः ॥ ८ ॥

ஒவ்வொரு வேதத்திற்கும் கிளைகள் எத்தனை ? அந்த கிளைகளுக்கான உபநிஷதங்கள் எத்தனை ? அவற்றின் பொருளை உணராவிட்டாலும் எழுத்துக்களை மட்டும் கற்பதற்கே பிறவிகள் எத்தனையோ தேவை. (8)

न्यायाः परस्परविभिन्नदिशः सहस्रं
उच्चावचानि च भवन्त्युपबृंहणानि ।
एवं स्थिते गिरिसुते निगमोपलानां
तात्पर्यसारमवधारयितुं क्षमः कः ॥ ९ ॥

*மலைமகளே ! தத்துவ விளக்கத்திற்கான வாதங்கள் ஆயிரம் உண்டு. ஒன்றுக்கொன்று அவை முரண்படுபவை. அவற்றிற்கு உதவுகிற விளக்கங்கள் பல. வேதங்களும் பாறை போன்று கடினமானவை. அவற்றின் உட்கருத்தை உணரத்தகுதி பெற்றவர் எவர் ? (9)*

अस्त्वक्षरग्रहविधिर्जनुषां सहस्रैः
आपाततो भवतु वापि ततोऽर्थबोधः ।
दुर्वादिकल्पितविकल्पतरङ्गसान्द्रान्
दुष्पूर्वपक्षजलधीन् कथमुत्तरेयुः ॥ १० ॥

*ஆயிரம் பிறவிகளை எடுத்து உழைத்து வாயால் சொல்லப் பழகிவிடலாம். அதன்பின் மேலெழுந்த வாரியாகப் பொருளும் அறியலாம். ஆனால் தவறான முறையில் ஐயமுறும்படி வாதித்துக் கிளப்பப்படுகிற எதிராளியின் வாதக் கடலை எப்படித் தாண்டுவது. ? (10)*

ब्रह्मेति शक्तिरिति बन्धविमोचनीति
मायामयीति मदनान्तकवल्लभेति ।
सप्ताष्टशब्दपरिवर्तनमात्र एव
सामर्थ्यमावहति शास्त्रपरिश्रमोऽयम् ॥ ११ ॥

*பிரும்மம், சக்தி, ஸம்ஸாரக் கட்டிலிருந்து விடுவிப்பவள், மாயை வடிவினள், மன்மதனை அழித்தவரின் இனியாள் என்றவாறு ஏழெட்டுச் சொற் சிலம்ப மாடுவதையே சாஸ்திரப்பயிற்சி தோராயமாகத் தந்துள்ளது. (11)*

तस्मै प्रसीदसि गिरीन्द्रसुते य इत्थं
संपादयेत शनकैरपरोक्षबोधम् ।
यस्मै प्रसीदसि स च क्षमतेऽवबोद्धुं
इत्थं परस्परसमाश्रयमेतदास्ते ॥ १२ ॥

*மலையரசரின் மகளே ! சிறுகச் சிறுக உன்னைப்பற்றி நேரிடை உணர்வைப் பெறுபவனுக்கு நீ அருள்புரிகிறாய் என்பர். உனது அருளைப் பெற்றவனே உன்னை உணரமுடியும் என்பர். இது ஒன்றையொன்று சார்ந்திருக்கும் நிலை அல்லவா ? (உன்னருளால் உன் தாள் பற்றலாம். உன் தாளைப் பற்றினால் உன் அருள் பெறலாமெனில் போகாத ஊருக்கு வழி இது). (12)*

आकर्णय त्वमिममभ्युपगम्य वादं
जानातु कोऽपि यदि वा हृदयं श्रुतीनाम् ।
तस्याप्यसंख्यभवबन्धशतार्जितोऽयं
द्वैतभ्रमो गलतु जन्मशतैः कियद्भिः ॥ १३ ॥

*இதனை அப்படியே ஏற்கிறேன். எனினும் என் கருத்தைக் கேட்பாய். வேதங்களின் உட்கருத்தை ஒருவன் நன்கு உணர்ந்துள்ளான் என்றே கொள்வோம். ஆனால் அவனது எண்ணற்ற முற்பிறவிகளிலும் (இப்பிறவியில் இதுவரையிலும்) ஏற்ற பல உள் வாஸனைகள் தந்துள்ள "நீ வேறு. நான் வேறு. அது இது வேறு" என்ற துவைதக்குழப்பம் இன்னம் எத்தனை பிறவிகளில் நீங்கும்? (பல முன்பிறவிகளில் தொடர்ந்து வந்துள்ள அறியாமை நீங்க மீண்டும் பலதடவை பிறந்து நூலறிவுபெற வேண்டியிருக்குமே ?) (13)*

काले महत्यनवधावपतन्कदापि
काप्यन्तिमे जनुषि कोऽपि गतिं लभेत ।
इत्थं समर्थनविधिः परमागमानां
पर्यायसूक्तिविधया नयनं नञर्थे ॥ १४ ॥

*முடிவற்று, நீண்டகாலவரை வரை நன்னெறி தவருமல் வாழ்ந்து ஏதோ ஒரு கடைசிப்பிறவியில் ஒருவன் நன்னிலை பெறக் கூடும் என்ற சாஸ்திரவசனங்கள் (பல பிறவிகளை எடுத்தாலும் நன்னிலைபெற இயலாதென) மறைமுகமாக இயலாமையைக் கூறுவதாகும். (14)*

**एकापवर्गसमये जगतोऽपवर्गः**
**सर्वापवर्गसमये पुनरस्तशङ्कः ।**
**ईदृग्विधं कमपि पक्षमिहावलम्ब्य**
**स्थातुं सुखं क्षममनेन पथा प्रवृत्तैः ॥ १५ ॥**

*''நல்லறிவாளன் ஒருவன் ஜீவன்முக்தி பெறும்போது உலகில் மற்ற ஜீவர்களுக்கும் முக்தி கிட்டும். எல்லோருக்கும் முக்தி கிட்டும் என்பதில் ஐயமில்லை'' என்பர். இதனை நம்பி ஒருவர் அவரவர் வழி சென்று ஸுகமாக வாழமுடியலாம். (முக்தியடையத் தகுதி பெற்றவரைச் சார்ந்துவாழ்வதாலேயே அனைவரும் முக்தி பெறலாம். ஒவ்வொருவரும் சமம், தமம், ஆத்ம விசாரம், ஆத்மாவில் லயித்தல் முதலிய பயிற்சிகளில் ஈடுபடுவது அவசியமில்லை என்றவாறு இந்தவாதம் அமையும். இது சரியானதா ?) (15)*

**अभ्यस्य वेदमवधाय च पूर्वतन्त्रं**
**आलक्ष्य शिष्टचरितानि पृथग्विधानि ।**
**अध्यापनादिभिरवाप्य धनं च भूरि**
**कर्माणि मातरलसाः कथमाचरेयुः ॥ १६ ॥**

*தாயே ! வேதத்தைக் கற்றுத் தினமும் ஓதி, பூர்வ மீமாம்ஸை முதலியவையை ஒட்டி, அவனுக்குரிய கருமங்களின் செய்முறையையும் பின்விளைவையும் ஆராய்ந்து, தன் முன்ஞோர் சென்ற பாதையில் சென்று, ஓதுவித்தல், வேள்வி புரிவித்தல் முதலியவற்ருல் பெரும் பொருள் ஈட்டிப் பின் தான் வேள்வி புரியத் தொடங்கும்*

போது சோர்வும் தளர்ச்சியும் அடைந்தவன் உரிய சடங்குகளைக் கருத்துடன் எவ்வாறு செய்வான் ? (சோர்வும் சோம்பலும் கொண்டவன் செயல் நேர்த்தியுடன் சடங்குகளைச் செய்ய இயலாதல்லவா ?) (16)

आयस्य तावदपि कर्म करोतु कश्चित्
तेनापि मातरधिकं किमिहानुभाव्यम् ।
आस्ते सुखं य इह भारतवर्षसीम-
न्यास्ते स किञ्चिदित उत्तरतोऽपसृत्य ॥ १७ ॥

அவ்வளவு முயன்று ஒருவன் கருமங்களைச் செய்வதாகக் கொண்டாலும், அதனால் அவன் அதிகமாகப் பெறப்போவது என்ன ? பாரத வருஷத்தின் எல்லைக்குள் இம்மையில் பெறவிருக்கிற இன்பத்தைப் பாரத வருஷத்திற்கப்பால் வடக்கேயுள்ள மேலுலகில் குறிப்பிட்ட அளவிற்குள் (மறுமையில்) பெறுவது தானே. (ஸ்வர்கம் முதலியதில் வாழ்வதே கருமங்களின் பலன். இதே சுகம் இவ்வுலக எல்லையில் கிட்டும்.) (17)

कर्म त्यजेम यदि नूनमधः पतेम
यद्याचरेम न कदापि भवं तरेम ।
कर्म त्यजेदिति चरेदिति च प्रवृत्ता
भावेन केन निगमा इति न प्रतीमः ॥ १८ ॥

உரிய கருமங்களைச் செய்யாவிடில் நிச்சயமாக தாழ்வைப் பெறுவோம். கருமங்களைச் செய்துவந்தால் அவற்றின் பின்விளைவான வினை நம்மைக் கட்டும்; பிறவிக் கடலைத் தாண்ட இயலாது. கருமங்களைச் செய்வாய் என ஒருபுறமும் கருமங்களை விட்டுவிடு என ஒருபுறமும் சாஸ்திரம் கூறுகிறது. ஏன் அவ்வாறு முரண்பட்ட உபதேசத்தைக் கூறுகிறது என்பது புரியவில்லை. (உரிய கருமங்களைச் செய்யாவிடில் பாபம். கருமத்தில் மூழ்கியிருந்தால் பிறவித்தளை நீங்காது என்று இருதலைக் கொள்ளி நிலை.) (18)

कर्मण्यकर्मविधिरेष यदाचरन्ति
कर्माणि तत्तदनुबन्धजिहासयेति।
सत्यं तथाप्यभिनवो भविता न बन्धः
प्राचीनबन्धहरणे क इवाभ्युपायः ॥ १९ ॥

*கருமங்களின் பின்விளைவு எனும் வினைத்தொடர்பு நம்மைக் கட்டாமலிருக்க கருமங்களின் பின்விளைவில் பற்றின்றிச் செய்வாய். இது கருமத்தை அகர்மமாகச் செய்யும் வழி. அதன்படி இனி கருமங்கள் செய்யப்படும்போது புதிய வினைத்தொடர்பு இராது என்பது சரி. இதுவரை செய்த கருமங்களின் வினைக் கட்டிலிருந்து விடுபடுவது எப்படி ?*

प्रारब्धकर्म कियदारभते कियद्वा
प्रारप्स्यते कियदिदं क इवावधत्ताम्।
कालः कियानिव मया प्रतिपालनीयो
यस्य क्षणार्धमपि कल्पशतत्वमेति ॥ २० ॥

*முன்னிழைத்த வினைகளில் (ஸஞ்சிதத்தில்) பலன் தரத்தொடங்கிய வினைப்பகுதி (பிராரப்தம்) எந்த அளவு பலன் தந்துள்ளது ? எந்த அளவு மீதமுள்ளது (பிராரப்த சேஷம்) ? எந்தக் காலவரையில் அது பலன் தரவிருக்கிறது ? எத்தனை காலம் காத்திருப்பது ? காத்திருக்கும்போது நொடி கல்பகாலமாகுமே ? (ஆக வினை தீர வாய்ப்பே இராதே.)*

पुंसः क्षणार्धमपि संसरणाक्षमस्य
सांख्यादयः सरणयो न विशन्ति कर्णम्।
संख्याय गाङ्गसिकताः सकलाश्च सूक्ष्माः
भुङ्क्ष्वेति वागिव महाक्षुधयार्दितस्य ॥ २१ ॥

*பிறவித்தளையில் சிக்கி நொடி நேரம் கூட உழல இயலாதவனுக்கு ஸாங்கியம் முதலான சாஸ்திரங்கள் காட்டும் வழி பெரும்பசியால் வாடியவனிடம் கங்கை*

மணல் அனைத்தையும் எண்ணிவிட்டு உடனே உண்ண வரலாம் என்பது போல் காதில் ஏறுது. (21)

भक्तिस्तु का यदि भवेद्रतिभावभेदः
तत्केवलान्वयितया विफलैव भक्तिः ।
प्रीतिस्त्वयि त्रिजगदात्मनि कस्य नास्ति
स्वात्मद्रुहो न खलु सन्ति जनास्त्रिलोक्याम् ।। २२ ।।

பக்தி என்பது என்ன ? அன்பால் ஈர்ப்பதும் ஈர்க்கப்பெறுவதும் அது எனில், அன்பும் ஈர்ப்பும் இல்லாத உயிரினமே இல்லை எனலாம். அதுவும் பலன் தராது. தேவி ! நீயே உலகனைத்தின் ஆத்மா. ஆத்மா தான் அன்புக்குரிய முதல் பொருள். உன்னிடம் அன்பில்லாதவன் ஆத்மதுரோகி. மூவுலகிலும் தன்னையே வெறுப்பவன் காணப்படமாட்டான். (22)

आत्मा समस्तजगतां भवतीति सम्यग्
विज्ञाय यद्वितनुते त्वयि भावबन्धम् ।
सा भक्तिरित्यभिमतं यदि सिद्धमिष्टं
व्यर्थं विशेष्यमलमस्तु विशेषणं नः ।। २३ ।।

உலகனைத்திற்கும் நீதான் ஆத்மா என்று நன்கறிந்து உன்னிடம் அன்பால் தன்னைப்பிணைத்துக் கொண்டவனின் நடைமுறையே பக்தி என்றால் அது சரியே. அது எத்தகையது என ஆராய்வது வீணே. பக்தி என்றொரு உணர்வு என்றமட்டில் அதுபோதும். (23)

स्वात्मेतरत्वमवधार्य परत्वबुद्ध्या
यत्प्रीयते गुरुजनेष्विव सैव भक्तिः ।
स्यादेतदेवमियमेव तु मे जिहास्या
द्वैतभ्रमात्किमधिकं भवबन्धमूलम् ।। २४ ।।

*தன்னைக் காட்டிலும் தைவம் வேறுபட்டதும் மேலானதும் எனக் கொண்டு பெற்ரோர் குரு முதலானவரிடம் காட்டும் அன்பு போன்றது தான் பக்தி எனில் அது தவிர்க்கத்தக்கதே. தேவி வேறு, தான் வேறு என்ற துவைதக் குழப்பத்தைக் காட்டிலும் பிறவிச் சிறைக்குச் செல்ல உதவுவது வேறு உள்ளதா ? (24)*

**सेवैव भक्तिरिति कर्मपथप्रवेशः**
**सेव्यप्रसादफलका किल कर्मसेवा।**
**ध्यानप्रवाह इति चेच्छ्रवणात्तृतीयः**
**प्रागेव मातरयमाकलितोऽभ्युपायः ॥ २५ ॥**

*தாயே! வழிபடுவதே பக்தி எனில் அது கர்மமார்க்கத் தினுட்பட்டது. வழிபடப்பெறுபவரின் மனம் குளிரச் செய்வதே அதன் பலன். (வேலைக்கேற்ற கூலி என்ற எதிர்பார்ப்பு நிலை அது). அருவிபோல் இடையறாது தொடர்கிற தியானமே பக்தி எனில் அது ஞானமார்க்கத்தினுட்பட்ட சிரவணம், மனனம், நிதித் தியாஸனம் என்பவற்றில் மூன்றாவதான நிதித்தியாஸனம் தானே அது? முன்னமே அதுபற்றி ஆராயப்பட்டது. (25)*

**अत्रैव दास्यसि विमुक्तिमथापि याचे**
**मातः शरीरपतनं मणिकर्णिकायाम्।**
**अस्तु स्वकृत्यमनुकम्पनमीश्वराणां**
**दासस्य कर्मकरतैव तथा स्वकृत्यम् ॥ २६ ॥**

*தாயே ! இங்கேயே முக்தி தருவாய் எனில் உன்னிடம் மணிகர்ணிகையில் என் உடல் விழவேண்டும் என்று யாசிப்பேன். பிரபுக்களுக்குப் பணியாளரிடம் பரிவுகாட்டுவது கடமை. பணியாளனுக்கு பிரபுவுக்கு ஸேவை புரிவதே கடமை. (காசியில் மணிகர்ணிகை கட்டத்தில் மரிப்பவரின் வலது காதில் சிவன் தாரகமந்திரம் உபதேசிக்கிறார். அங்கு மரித்தாலே முக்தி.) (26)*

सद्यो भवेत्सुकृतिनामुपदेशलाभः
पापात्मनां बहुतिथे समये व्यतीते ।
इत्यादिभिः किल पुराणवचोभिरम्ब
वाराणसीमपि न याचितुमुत्सुकोऽस्मि ॥ २७ ॥

*அங்கும் புண்ணியம் புரிந்தவருக்கு விரைவில் முக்தி. பாபிகளுக்கு வெகுநாட்கள் வசித்த பிறகே முக்தி கிட்டும். இவ்வாறு பல புராணவசனங்களால் காசியில் மரணத்தையும் யாசிக்க எனக்கு ஆர்வமில்லை. (27)*

आक्रान्तमन्तररिभिर्मदमत्सराद्यैः
गात्रं वलीपलितरोगशतानुविद्धम् ।
दारैः सुतैश्च गृहमावृतमुत्तमर्णैः
मातः कथं भवतु मे मनसः प्रसादः ॥ २८ ॥

*தாயே ! கர்வம், பொறாமை முதலிய உள்ளத்து எதிரிகளால் மனம் கவரப்பட்டுள்ளது. மூப்பும் நரையும் நூற்றுக்கணக்கான நோய்களும் உடலினுள் இடம் பிடித்துள்ளன. மனைவியும் மக்களும் கடன் காரர்களாக வீடு முழுவதிலும் சூழ்ந்துள்ளனர். என் மனம் எவ்வாறு தெளிவுபெறும் ? (28)*

धन्याः कति त्रिभुवने परमोपभोग्यं
संसारमेव परमेश्वरि भावयन्तः ।
आभासरूपमवबोधमिमं समेत्य
क्लिश्ये कियत्कियदहं त्वमुना भवेन ॥ २९ ॥

*பேராளுமை பெற்றவளே ! பிறந்து வாழ்வதையே மூவுலகிலும் மிகச்சிறந்த சுகானுபவமாகக் கருதுகிற பாக்கிய சாலிகள் பலர். அரைகுறை அறிவுபெற்ற நானோ இப்பிறவியால் எத்தனை துன்பத்தை அனுபவிக்கிறேன். (29)*

का संसृतिः किमपचारनिबन्धनेयं
कीदृग्विधस्य तव किं क्षतमेतयेति।
प्रश्ने तु नास्मि कुशलः प्रतिवक्तुमेव
खेदस्तु मे जननि कोऽप्ययमेवमास्ते ॥ ३० ॥

*தாயே ! பிறவித்தளை என்பது என்ன ? எந்த செயலால் இது நேர்ந்தது ? எதனுல் இது தீரும் ? எந்த நிலையில் உனக்கு இதனுல் என்ன தீங்கு விளைந்தது ? இப்படிக் கேட்டால் விடைதர என்னுல் இயலாது. ஏதோ ஒரு துன்பம் எனக்கு இவ்வாறு உள்ளது. (30)*

एवं गतस्य मम सांप्रतमेतदर्हं
अत्रेदमौपयिकमित्थमिदं च साध्यम्।
अस्मिन्प्रमाणमिदमित्यपि बोद्धुमम्ब
शक्तिर्न मे भुवनसाक्षिणि किं करोमि ॥ ३१ ॥

*உலகின் சாட்சியான தாயே ! ''இந்நிலையில் எனக்கு இப்போது இது ஏற்றது; இது உதவும்; இது நிறைவேறும்; இதனை இவ்வாறு நிறைவேற்றலாம்; இதற்கு ஆதாரம் இது'' என்று கண்டறியவும் எனக்குத் திறமை இல்லையே ! என் செய்வேன். (31)*

न ज्ञायते मम हितं नितरामुपायो
दीनोऽस्मि देवि समयाच(क)रणाक्षमोऽस्मि।
तत्त्वामनन्यशरणः शरणं प्रपद्ये
मीनाक्षि विश्वजननीं जननीं ममैव ॥ ३२ ॥

*எனக்கு இதமானது இது எனத் தெரியவில்லை. அதற்கு உதவக் கூடியதும் தெரியவில்லை. முறைப்படி உரியநேரத்தில் அதனைச் செய்யவும் இயலவில்லை. நான் இரக்கத்திற்கு உரியவன். வேறு புகலிடமில்லாதவன். மீனுக்ஷி ! உலகின் அன்னையும் எனது அன்னையுமான உன்னைச் சரணடைகிறேன். (32)*

**किञ्चिन्मया श्रुतिषु किञ्चिदिवागमेषु**
**शास्त्रेषु किञ्चिदुपदेशपथेषु किञ्चित्।**
**आघ्रातमस्ति यदतो भवतीं वरीतुं**
**गोप्त्रीति काचिदुदपद्यत बुद्धिरेषा ॥ ३३ ॥**

*வேதங்களில் சிறிதளவும் ஆகமங்களில் சிறிதளவும் சாஸ்திரங்களில் சிறிதளவும், குருவின் உபதேசமுறைகளில் சிறிதளவும் முகர்ந்து பார்த்துள்ளேன். அதன் பயனாக நீ தான் காப்பாற்றுபவள் என்று கருதி உன்னைக் காப்பாளராக வரிக்கும் எண்ணம் உண்டானது. (இந்த சுலோகம் முதல் 49வது சுலோகம் வரை தேவியைச் சரணடைவதே வழி எனக்கண்டு சரணாகதிக்கான உபாயங்களைக் கையாளுகிறார். இறைவனைச் சரணடைய உதவுவதைப்பெற உறுதி, அதற்கு எதிரானவற்றைத் தவிர்ப்பது, காப்பார் என்ற நம்பிக்கை, நீதான் காக்கவேண்டும் என்று கோருவது, தனது வாழ்வின் பொறுப்பனைத்தையும் அவளிடம் ஒப்பிப்பது, தான் தனித்துச் செயல்பட இயலாதவன் என்று உணர்தல் என்று ஆறும் சரணாகதிக்கான உபாயங்கள்) (33).*

**ब्रह्मैवमेवमहमेष तदास्त्युपायः**
**इत्यागमार्थविधुराः प्रथमे दयार्हाः।**
**त्वद्रक्षकत्वगुणमात्रविदो द्वितीयाः**
**इत्यर्थये सदधिकारनिरूपणाय ॥ ३४ ॥**

*பரப்பிரும்மம் இத்தகையது, நான் இத்தகையவன், பிரும்மத்தை அடைய இது உபாயம் என்று பிரித்து ஆராய்பவர் வேதத்தின் உட்கருத்தை உணராதவரே. இவர்கள் முதலில் இரக்கத்திற்குரியவர். நீ காப்பவள் என்பதை மட்டும் அறிந்து உண்மை நிலை உணராதவர் இரண்டாவதாக இரக்கத்திற்குரியவர். உன் பரிவிற்குரிய சரியான நிலை எது என்பதை விளக்க வேண்டுகிறேன். (34)*

मातः करोषि ममतां मयि यावदीषत्
तावद्यते मम ततः किमिवास्ति साध्यम्।
मामित्थमित्थमुपयुङ्क्ष्व न विस्मरेति
किं स्वामिनं त्वरयते क्वचन स्वभृत्यः ।। ३५ ।।

*தாயே ! என்னிடத்தில் நீ 'தன்னைச் சார்ந்தவன்' என்ற அபிமானத்தைச் சிறிது காட்டுமளவிற்கு நான் முயல்வேன். அதைவிடச் சாதிப்பதற்கு வேறு என்ன உள்ளது?'' என்னை இவ்வாறு இவ்வாறு பயன்படுத்திக் கொள்வாய்; என்னை மறந்து விடாதே'' என எங்காவது பணியாள் பிரபுவை வேண்டுவதுண்டா ! (35)*

त्याज्यं त्यजानि विहितं च समाचराणि
नित्येषु शक्तिमनुरुध्य हि वर्तितव्यम्।
तद्बुद्धिशक्तिमनुरुध्य न कार्यशक्तिं
इत्येतदेव तु शिवे विनिवेदयामि ।। ३६ ।।

*தவிர்க்க வேண்டியதைத் தவிர்ப்பேன். செய்யவேண்டியதை நன்கு செய்வேன். ஆனால் தினசரிப்பணிகளில் என் சக்திக்கேற்ப நடக்கவேண்டியுள்ளது. மங்களமானவளே ! எந்தச் செயலும் அவனவனது அறிவாற்றலுக்கேற்பத் தான் அமையும். காரியச்சிறப்பை ஒட்டி அல்ல. இதை மட்டும் உன்னிடம் தெரிவித்துக் கொள்கிறேன். (36)*

आत्मैव भार इति तं त्वयि यो निधत्ते
सोऽङ्गानि कानि कलयत्वलसः प्रपत्तेः ।
विश्वत्र साऽत्र तु विलक्षणलक्षणा या
विस्रम्भसंपदियमेव समस्तमङ्गि ।। ३७ ।।

*தன்னையே சுமை எனக் கருதி அதனை உன் பொறுப்பில் விடுபவன் சோம்பேறி. சரணமடைதலின் எந்த அங்கத்தை அவன் முழுவதாகச் செய்வான் ? ''அவள் எங்கும்*

*உள்ளாள். இங்கோ தனிச்சிறப்புடன் உள்ளாள் என்ற முழு நம்பிக்கையே எல்லா அங்கங்களின் முழு உருவம். அதுவே பிரதானமும் கூட. (*विश्वत्र सा*ऽ*त्र*எனுமிடத்தில் *विश्वस्य साक्षिणि* என்றபாடமுண்டு. உலகிற்கு ஸாக்ஷியாக நிற்பவளே !) (37)*

**त्वत्प्रेरणेन मिषतः श्वसतोऽपि मातः**
**प्रामादिकेऽपि सति कर्मणि मे न दोषः ।**
**मात्रैव दत्तमशनं ग्रसतः सुतस्य**
**को नाम वक्ष्यति शिशोरतिभुक्तिदोषम् ॥ ३८ ॥**

*தாயே ! உன தூண்டுதலால் விழித்திருக்கிறேன்; மூச்சு விடுகிறேன். எனது செயல்தவருனதெனில் அதில் என் குறை ஏதுமில்லையே ! தாயால் கொடுக்கப்பெற்ற உணவை விழுங்குகிற சிசுவின் மீது அதிக அளவு உண்டுவிட்டான் என்ற குற்றம் சாராது. (38)*

**मुक्तिं सिसाधयिषतां निजयैव बुद्ध्या**
**प्रारब्धकर्म भवतु प्रतिबन्धहेतुः ।**
**त्वामेव साधनतयापि समाश्रितानां**
**तुल्यं तदम्ब यदि कस्तव वीरवादः ॥ ३९ ॥**

*அணைத்துக்காப்பவளே ! தன் அறிவின் உதவி கொண்டு முக்திபெற முயல்பவனுக்கு பிராரப்தவினை இடையூருகலாம். உன்னையே ஸாதனமாகக் கொண்டவனுக்கும் அதே இடையூறு நேருமாளுல் உன் திறமைக்குப் பாராட்டு ஏது ? (39)*

**प्रारब्धकर्म गिरिजे भवदाश्रितानां**
**अन्यत्र संक्रमय नाशय वा समूलम् ।**
**मर्त्याश्च खल्वपि विषं वपुषि प्रसक्तं**
**संक्रामयन्ति परतोऽपि च नाशयन्ति ॥ ४० ॥**

*மலைமகளே ! உன்னை அண்டியவர்களின் பிராரப்த கருமத்தின் மீதியை வேறு ஓரிடத்தில் மாற்றுவாய். அல்லது கருமத்தை வேருடன் அழிப்பாய். மாந்தரும் தன் உடலில் பரவிய விஷத்தை வேறு இடத்தில் இறக்கிவிடுவர், அல்லது வேருடன் அழிப்பர். (உன்னைச் சரணடைந்தவனிடம் பிராரப்த கருமம் ஒட்டாதபடி காப்பது உன் கடமை.) (40)*

**त्वद्दर्शनश्रवणवन्दनचिन्तनादि-**
**ष्वक्षाणि देवि विनियुज्य यथाधिकारम् ।**
**रक्षेत्यसंख्यभवसंभृतयैव मैत्र्या**
**रुन्ध्यां यदि स्थिरममून्यधुनैव न स्युः ॥ ४१ ॥**

*உன்னைக் காண்பதிலும் உன்னைப்பற்றிக் கேட்பதிலும் உன்னை வணங்குவதிலும் நினைப்பதிலும் என் புலன்களைத் தகுதிக்கேற்பப் பயன்படுத்திப் பல பிறவிகளில் சேமித்த நட்புணர்வுடன் காப்பாற்றுவாய் என உன்னை வற்புறுத்தினேனாகில் அப்போதே பிராரப்த வினைகள் வலிவிழந்து நழுவிவிடும். (41)*

**त्रातव्य एष इति चेत्करुणा मयि स्यात्**
**त्रायस्व किं सुकृतदुष्कृतचिन्तया मे ।**
**कर्तुं जगत्तिरयितुं च विशृङ्खलायाः**
**कर्मानुरोध इति कं प्रति वञ्चनेयम् ॥ ४२ ॥**

*இவன் காப்பாற்றப்படவேண்டியவன் என்று என்னிடம் கருணையிருந்தால் காப்பாற்று. என் புண்ணியத்தையும் பாபத்தையும் கருத்தில் ஏன் கொள்கிறாய்? உலகைப்படைக்கவும் மறைக்கவும் தடையின்றிச் செயல்படுகிற நீ வினையை ஒட்டி நடப்பேன் என்பது யாரிடம் புரிகிற ஏமாற்றுதல் ? (42)*

**त्वय्यर्पितं प्रथममप्पययज्वनैव**
**स्वात्मार्पणं विदधता स्वकुलं समस्तम् ।**

का त्वं महेशि कुलदासमुपेक्षितुं मां
को वानुपासितुमहं कुलदेवतां त्वाम् ॥ ४३ ॥

*முதலில் தன்னை உனது பொறுப்பில் ஒப்படைத்த அப்பய தீக்ஷிதர் (என் பெரிய பாட்டனார்.) (ஆத்மார்பணஸ்துதியில்) பின்னர் தன் வம் சத்தினரனைவரையும் ஒப்படைத்துள்ளார். மஹேச்வரியே ! குல அடிமையான என்னைப் புறக்கணிக்க உனக்கேது உரிமை ? குலதெய்வமான உன்னை வழிபடாமலிருக்க என்னாலும் இயலாதே. (43)*

मौढ्यादहं शरणयामि सुरान्तरं चेत्
किं तावता स्वमपि तस्य भवामि मातः ।
अज्ञानतः परगृहं प्रविशन्परस्य
स्वत्वं प्रयास्यति पशुः किमु राजकीयः ॥ ४४ ॥

*தாயே ! அறியாமையால் நான் வேறு தேவனைச் சரணடைந்தேன் என்றாலும் அதனால் நான் அவனது உரிமைப் பொருளாகிவிடமுடியுமா ? அரசனின் பசு அறியாமையால் குடிமகனின் கொட்டிலினுள் நுழைந்ததால் அது அவனது உரிமைப்பொருளாகி விடுமா ? (44)*

आधाय मूर्धनि वृथैव भरं महान्तं
मूर्खा निमज्जथ कथं भवसागरेऽस्मिन् ।
विन्यस्य भारमखिलं पदयोर्जनन्या
विस्रब्धमुत्तरत पल्वलतुल्यमेनम् ॥ ४५ ॥

*அறிவிலிகளே ! பெருஞ்சுமையை வீணே தலையில் சுமந்து பிறவிக்கடலில் ஏன் மூழ்கிறீர்கள் ? தாயின் திருவடிகளில் அச்சுமையை இறக்கிவைத்துவிட்டு நம்பிக்கையுடன் பிறவிக்கடலைச் சிறு குட்டையைப் போல் எளிதில் தாண்டுவீர். (45)*

केदं पतिष्यति वपुः क ततो नु गम्यं
को दण्डयिष्यति कियन्तमनेहसं वा ।
किं तस्य संतरणसाधनमित्यनन्ता
चिन्ता स्थिता त्वयि शनैरवतारिता सा ॥ ४६ ॥

*எங்கே இந்த உடல் விழும் ? அதன் பின்பு எங்கு செல்லவேண்டியிருக்கும் ? எவர் என்னைத் தவற்றுக்குத் தண்டிப்பார் ? அந்த தண்டனை எத்தனை நாட்களுக்கு ? அவற்றைக் கடப்பது எப்படி ? இந்த முடிவு காண இயலாத கவலை அனைத்தையும் இன்று உன்னிடம் மெள்ள இறக்கிவைத்து விட்டேன். (46)*

ज्ञानं दिशेयमुत तेन विनोद्धरेयं
प्रारब्धमप्यपलपेयमुतानुरुन्ध्याम् ।
इत्थं सकृत्प्रपदनैकवशंवदायाः
मातुर्मयि (मातर्मयि) प्रववृते महतीह चिन्ता ॥ ४७ ॥

*தாயே ! "இவனுக்கு ஜ்ஞானத்தை அருளட்டுமா ? ஜ்ஞானம் தராமலே கரையேற்றட்டுமா ? பிராரப்த வினையை மறைத்துவிடட்டுமா? அதை அனுசரிக்கட்டுமா?" என்ற பெருங்கவலை தாயான உனக்கு இப்போது என் விஷயத்தில் ஏற்பட்டுள்ளது. ஆனால் உன்னை ஒரே ஒருதடவை மட்டும் சரணமடைந்துள்ளதை யொட்டி நீஎன்னைப்பற்றிய சிந்தனையின் வசப் பட்டுள்ளாய். (47)*

एतज्जडाजडविवेचनमेतदेव
क्षित्यादितत्त्वपरिशोधनकौशलं च ।
ज्ञानं च शैवमिदमागमकोटिलभ्यं
मातुर्यदङ्घ्रियुगले निहितो मयात्मा ॥ ४८ ॥

*தாயின் திருவடியில் என் ஆத்மா என்னால் வைக்கப்பட்டது. அதுவே ஜடப்பொருளையும்*

*சேதனப்பொருளையும் பகுத்து ஆராய்வதாயிற்று. பூமி முதலிய தத்துவங்களின் பரிசோதனையில் திறமையாயிற்று. கோடி ஆகமநூல்களை ஆராய்வதால் ஏற்பட்ட பர சிவஜ்ஞானமுமானது. (48)*

**षट्त्रिंशदावरणमध्यजुषि त्वदङ्घ्रौ**
**हालास्यनाथदयिते निहितो मयात्मा ।**
**भूभूतलत्रिदिव (दश) वर्तिषु कः क्षमेत**
**तच्चक्षुषाऽपि निभृतेन निरीक्षितुं माम् ॥ ४९ ॥**

*ஹாலாஸ்யம் எனும் மதுரை க்ஷேத்திரத்தின் நாதரான ஸுந்தரேச்வரரின் இனிய மனைவியே ! முப்பத்தாறு தத்வங்களாலான ஆவரணங்களின் நடுவே அமர்ந்துள்ள உனது திருவடியில் என் ஆத்மா என்னால் வைக்கப்பட்டது. பூமி, பாதாளம், ஸ்வர்கம் என்ற மூவுலகிலும் வசிப்பவர் எவரும் என்னை ரகசியமாகக்கூடக் கண்ணால் காண முடியாது. (49)*

**बन्धं हरिष्यसि सुखं वितरिष्यसीति**
**निश्चप्रचं निखिलमम्ब तदास्त एव ।**
**संप्रत्यहं त्वयि निधाय भरं समस्तं**
**यन्निर्वृणोमि किमितोऽपि ममापवर्गे ॥ ५० ॥**

*அன்னையே ! நீ வினைக்கட்டை நீக்கி ஆனந்தத்தைத் தருவாய் என்பது நிச்சயமே. இப்போது நான் சுமை அனைத்தையும் உன்னிடம் இறக்கி வைத்துவிட்டு நிம்மதியாயுள்ளேன். இதைவிட முக்தியில் என்ன உள்ளது ? (50)*

**काश्यां निपातय वपुः श्वपचालये वा**
**स्वर्गं नय त्वमपवर्गमधोगतिं वा ।**
**अद्यैव वा कुरु दयां पुनरायतौ वा**
**कः संभ्रमो मम धने धनिनः प्रमाणम् ॥ ५१ ॥**

நீ என் உடலைக் காசியில் கொண்டு வைப்பாயோ அல்லது நாயையடித்து உண்கிற கீழ்மகனின் வீட்டில் தள்ளுவாயோ. ஸ்வர்கம் கொண்டு செல்வாயோ, முக்தி தருவாயோ அல்லது நரகத்தில் தள்ளுவாயோ. இதில் நான் குழம்புவது அவசியமில்லை. சொத்து விஷயத்தில் சொத்துக் காரனுக்குத் தானே பொறுப்பு ? (உன் விருப்பப்படி பங்கீடு செய். அது உன் பொறுப்பு). (51)

नाहं सहे तव कथाश्रवणान्तरायं
नाहं सहे तव पदार्चनविच्युतिं वा ।
मोक्षं दिशैतदविरुद्धमिदं न चेत्स्यात्
नैवास्तु मातरपवर्गमहोपसर्गः ॥ ५२ ॥

தாயே ! உன் கதை கேட்பதற்கு இடையூறு நேர்வதையும் பொறுக்கமாட்டேன். உன் திருவடிகளை வழிபடுவதற்கான வாய்ப்பு நழுவுவதையும் பொறுக்க மாட்டேன். இவற்றிற்கு இடையூருக இல்லாதிருந்தால் மோக்ஷத்தைத் தருவாய். மோக்ஷம் இடையூருனல் அது வேண்டவே வேண்டாம். (52)

आचूडमाचरणमम्ब तवानुवारं
अन्तः स्मरन्भुवनमङ्गलमङ्गमङ्गम् ।
आनन्दसागरतरङ्गपरम्पराभिः
आन्दोलितो न गणयामि गतान्यहानि ॥ ५३ ॥

(இது வரை தேவியை அணுகும் முறைகளைப் பரிசீலித்துச் சரணாகதியை உபாயமாக ஏற்ருர். இனி தான் இதுகாறும் கண்டானந்தித்த தேவியின் அழகுவடிவை பாதம் முதல் கேசம் வரை கவியாகி உத்ப்ரேக்ஷையும் சிலேடையும் மற்ற அலங்காரங்களும் காட்டி வர்ணிக்கிருர்.)

அம்பிகையே ! தலை முதல் திருவடிவரை உலகிற்கு மங்களமளிக்கிற உனது ஒவ்வொரு அங்கத்தையும் இடையருது உள்ளத்தில் பதித்து ஆனந்தக் கடலின்

மோதுகிற அலைவரிசைகளின் மீது ஊஞ்சலாடுகிறேன். கடந்த காலவரையை நான் சற்றும் உணரவில்லை. (53)

पाषाणतोऽपि कठिने शिरसि श्रुतीनां
प्रायः परिभ्रमवशादिव पाटलाभम्।
अम्ब स्मरेयममृतार्णवमन्थलब्ध-
हैयंगवीनसुकुमारमिदं पदं ते ॥ ५४ ॥

திருவடிகள்- பாறுங்கல்லைவிடக் கடினமான உபநிஷத்துகளில் அதிகம் உலாவுவதால் அவை சிவந்தன போலும். அமுதக் கடலைக் கடைந்தெடுத்த வெண்ணெய் போல் மென்மைமிக்க அந்த பாதத்தைத் தியானம் செய்கிறேன். (54)

ये नाम सन्ति कतिचिद्गुरवस्त्रिलोक्यां
तेषामपि स्वयमुपेतवता गुरुत्वम्।
पादेन मूर्ध्नि विधृतेन वयं तवाम्ब
संसारसागरमिमं सुखमुत्तरामः ॥ ५५ ॥

அன்னையே ! மூவுலகிலும் கனத்த (பெருமை மிக்க) பெரியோர்களைவிட கனம் (பெருமை) மிக்க உன் திருவடியைத் தாங்கிய நாங்கள் இந்தப்பிறவிக்கடலை எளிதில் தாண்டுகிறோம். (குரு அறிவால் கனத்தவர் - பெரியவர். அவரைவிட கனத்தது- பெருமை மிக்கது உன் திருவடி. அதனுல் பெரியோர் உன் திருவடியைத் தாங்குவர். கடலைக்கடப்பவன் கனத்த பொருளைச் சுமக்கமாட்டான். பக்தனே கனத்ததைத் தாங்கிக் கடலையும் சுகமாகத் தாண்டுகிறுன்). (55)

साधारणे स्मरजये निटिलाक्षिसाध्ये
भागी शिवो भजतु नाम यशः समग्रम्।
वामाङ्घ्रिमात्रकलिते जननि त्वदीये
का वा प्रसक्तिरिह कालजये पुरारेः ॥ ५६ ॥

*தாயே ! (கணவனின் இடப்பாதியைத் தன் உரிமையிடமாக நீ கொண்டுள்ளாய். நீ அர்த்த நரேச்வரீ, சிவன் அர்த்தநாரீச்வரர்.) நெற்றிக் கண்ணுல் ஸாதிக்கப் பட்டதால் மன்மதனை வென்றதில் இருவருக்கும் சமப்பங்கு உள்ளதெனினும் பாதிப்பங்கு பெற்றிருப்பதால் சிவன் முழுப்புகழிற்கும் உரிமை பெறட்டும். (உன் பங்கான) இடது காலால் மட்டும் நிகழ்ந்த யமனை வென்றதில் திரிபுரம் எரித்தவருக்கு பங்கு ஏது ? (56)*

**स्यात्कोमलं यदि मनो मम विश्वमातः**
**तत्पादयोर्मृदुलयोस्तव पादुकास्तु ।**
**स्यात्कर्कशं यदि करग्रहणे पुरारेः**
**अश्माधिरोहणविधौ भवतूपयोगः ॥ ५७ ॥**

*உலகின் அன்னையே ! என் மனம் மிக மென்மையுள்ளதெனக் கருதிலுல் மென்மை மிக்க உன் திருவடிகளுக்குப் பாதுகையாகட்டும். என் மனம் கடினமென எண்ணிலுல் திருமணத்தின் போது சிவபெருமான் உன் திருவடியை அம்மி மிதிக்கத்தூக்கி வைக்க ஏற்ற அம்மிக் கல்லாகட்டும். (57)*

**प्रस्निग्धमुग्धरुचिपादतले भवत्या**
**लग्नं दृढं यदिह मे हृदयारविन्दम् ।**
**एषैव साग्रभुवनद्विशतीपतित्व-**
**साम्राज्यसूचनकरी तव पद्मरेखा ॥ ५८ ॥**

*உனது மிகவும் மென்மையும் அழகும் மிக்க உள்ளங்காலில் என் தாமரை போன்ற இதயம் நன்கு பதிந்துள்ளது. இதுவே இருநூற்றுக்கும் மேற்பட்ட (224) உலகங்களின் சக்கிரவர்த்தினியாயிருப்பதற்கான யோகத்தைச் சுட்டிக் காட்டுகிற தாமரை ரேகையாகியுள்ளது. (உள்ளங்காலில் தாமரை போன்ற ரேகை காணப்படுபவர் சக்கிரவர்த்தியாயிருப்பர்.)*

अप्राकृतीं मृदुलतामविचिन्त्य किंचिद्
आलम्बितासि पदयोः सुदृढं मया यत्।
तन्मे भवार्णवनिमज्जनकातरस्य
मातः क्षमस्व मधुरेश्वरि बालकृत्यम्॥ ५९॥

தாயே ! மதுரையின் அரசியே ! இயல்பை மீறிய மென்மையும் அழகும் மிக்க உன்திருவடி நோகுமே என்று சிறிதும் எண்ணுமல் அவற்றைக் கெட்டியாகப் பற்றி யுள்ளேன். அதன் காரணம் பிறவிக்கடலைக் கடக்கையில் மூழ்கி விடுவோமோ என்ற பயம் தான். எனது இந்த சிறுபிள்ளைத்தனத்தைப் பொறுப்பாய். (59)

यत्रानमन्पशुपतिः प्रणयापराधे
मन्दं किल स्पृशति चन्द्रकलाञ्चलेन।
पुष्पार्चनेऽपि मृदितं पदयोर्युगं तत्
मातस्तुदन्ति न कथं परुषा गिरो मे॥ ६०॥

தாயே ! ஊடலால் நேர்ந்த தவற்றிற்காக உன் திருவடிகளில் வணங்குகிற சிவன் சந்திரகலையின் மென்மைமிக்க நுனியால் உன் திருவடியை வருடுகிறுர். பூக்களைக் கொண்டு அர்ச்சனை செய்தாலே நோகின்ற உன் திருவடிகளை கரடுமுரடான வரண்ட எனது சொற்கள் மேலும் நோகச் செய்கின்றனவோ ! (60)

अव्याजसुन्दरमनुत्तरमप्रमेयं
अप्राकृतं परममङ्गलमङ्घ्रिपद्मम्।
संदर्शयेदपि सकृद्भवती दयार्द्रा
द्रष्टास्मि केन तदहं तु विलोचनेन॥ ६१॥

இயல்பாகவே அழகுமிக்கதும் எல்லாவற்றிற்கும் மேலானதும் அறிவிற்கு அப்பாற்பட்டதும் இயற்கையை மீறியதும் மிகவும் மங்களமுமான உன்

*திருவடித்தாமரையை, தயையால் நெகிழ்ந்த நீ ஒருக்கணம் எனக்குக் காட்டக் கூடும். அப்படிக் காட்டினுல் எந்தக் கண்ணுல் பார்ப்பேன்? (இயற்கைக்கு உட்பட்டதை இந்தப் பௌதிகக்கண் பார்க்கக்கூடும். தெய்வ அழகைக் காண இதனுல் இயலாதே?) (61)*

**दिव्या दृशोऽपि दिविषद्ग्रहणोचितानि**
**वस्तूनि काममवधारयितुं क्षमन्ते ।**
**त्वन्मात्रवेद्यविभवे तव रूपधेये**
**त्वद्भाव एष शरणं परिशेषितो नः ॥ ६२ ॥**

*தெய்விகப் பார்வை கொண்ட கண்களைப் பெற்ருலும் அவை தேவர்களால் காணத்தக்கதை மட்டும் உணரக்கூடும். உன்னுல் மட்டுமே காணத்தக்க பெருமை மிக்க உன் உருவத்தைக் காண, உன் நிலை பெறுதல் மட்டுமே வழியாகும். உன் உருவைக் காண உன் நிலை அருளாயோ? (62)*

**अस्मिन्महत्यनवधौ किल कालचक्रे**
**धन्यास्तु ये कतिपये शुकयोगिमुख्याः ।**
**लीनास्त्वदङ्घ्रियुगले परिशुद्धसत्वाः**
**तानात्मनस्तव नखानवधारयामः ॥ ६३ ॥**

*எல்லையற்ற இந்தப் பெரிய கால வட்டத்தில் சுகர் முதலான யோகிகள் சிலரே தூய உள்ளத்தினராக உன் திருவடிகளில் லயமடைந்தனர். அவர்களே பாக்கியம் பெற்றவர்கள். அதனுல் உன் கால்நகங்களாக உன்மீது பதிந்துள்ளனர் என நிச்சயிக்கிறோம். (63)*

**आशैशवान्ममतया कलितस्त्वयाऽसौ**
**आनृण्यमम्ब तव लब्धुमना मृगाङ्कः ।**
**स्वात्मानमेव नियतं बहुधा विभज्य**
**त्वत्पादयोर्विनिदधे नखरापदेशात् ॥ ६४ ॥**

*அன்னையே! சிசுப்பருவத்திலிருந்து "என்னைச் சேர்ந்தவன்" என்று உன்னால் அபிமானத்துடன் வளர்க்கப்பெற்ற இந்த சந்திரன் உன்னிடம் கடன்பட்டதைத் தீர்க்கும் எண்ணத்தில் தன்னையே கண்டதுண்டமாக்கி நகங்கள் என்ற பெயரில் உன் திருவடிகளில் பதித்துள்ளான். (64)*

**नान्तः प्रवेशमयते किमपि श्रुतं मे**
**नास्तिक्यवादशिलया प्रतिरुध्यमानम् ।**
**तत्पातयाम्यहमिमां महतीमधस्तात्**
**पादोदकेन कियता परदेवतायाः ॥ ६५ ॥**

*நாத்திகவாதம் என்ற பாறுங்கல்லால் அடைக்கப் பட்டதால் எந்த வேதச் சொற்களும் காது வழியே என் உள்ளத்தைச் சென்றடையவில்லை. பரதேவதையான உனது திருவடி கழுவிய நீரால் அந்தப் பாறையைநெகிழ்த்திக் கீழே வீழ்த்துவேன். (ஆற்றின் ஓட்டத்திற்குத் தடையாக உள்ள பெரும்பாறையை ஆற்றின் வேகம் உருட்டிச் சிதைத்து மணலாக்கிவிடும். நாஸ்திகவாதத்தால் ஏற்பட்ட தெய்வ நம்பிக்கையின்மை தேவியின் திருவடி கழுவிய நீரில் நீராட மறையும்). (65)*

**संनाहिभिर्यमभटैः परिवार्यमाणे**
**मय्यर्भके करुणया स्वयमापतन्त्याः ।**
**आकर्णयेयमपि नाम विरामकाले**
**मातस्तवाङ्घ्रिमणिनूपुरशिञ्जितानि ॥ ६६ ॥**

**கணுக்கால்-** *தாயே! ஆரவாரமிடுகிற யமனின் படைவீரர்கள் என்னைச் சூழும்போது, என்னிடம் பரிவால் என்னை நோக்கி ஓடிவருகிற உனது கால் சிலம்புகளின் ஒலியை என் இறுதிவேளையில் கேட்பேனோ? (66)*

ब्रह्मेशकेशवमुखैर्बहुभिः कुमारैः
पर्यायतः परिगृहीतविमुक्तदेशम्।
उत्सङ्गमम्ब तव दास्यसि मे कदा त्वं
मातृप्रियं किल जडं सुतमामनन्ति ॥ ६७ ॥

மடி-இடுப்பு:- *அம்மா ! பிரும்மா, ஈசன், கேசவன் முதலிய உனது பல புதல்வர்கள் போட்டியிட்டு வரிசையாக உன் மடிமீது ஏறி அமர்ந்து இறங்குவர். அந்த உன் மடியை எனக்கு எப்போது தரப்போகிறாய் ? அசட்டுப்பிள்ளை தானே தாய்க்குச் செல்லப்பிள்ளை ! (67)*

ऊरौ शिरस्तव निवेश्य दयावितीर्ण-
संव्यानपल्लवसमीरविनीतखेदम्।
अत्रैव जन्मनि विभोः परमोपदेशं
आकर्णयेयमपि किं मणिकर्णिकायाम् ॥ ६८ ॥

*பரிவால் எனது தலையை உனது தொடைமீது வைத்து உன் முந்தானையை வீசிக் களைப்பகற்றி மடிமீது கிடத்தி விசுவேச்வரனது உயர்ந்த ஞானோபதேசத்தை மணிகர்ணிகையில் கேட்பதற்கு அருள்வாயா ? (68)*

काञ्चीगुणग्रथितकाञ्चनचेलदृश्य-
चण्डातकांशुकविभापरभागशोभि।
पर्यङ्कमण्डलपरिष्करणं पुरारेः
ध्यायामि ते निखिलमम्ब नितम्बबिम्बम् ॥ ६९ ॥

*தாயே ! அழகுவாய்ந்த உள்ளாடை, அதன்மீது தங்கத்தாலான பட்டாடை, அதன்மீது இடுப்பணியான காஞ்சி எனும் இறுகப்பிணைக்கிற மணியொலிக்கும் சங்கிலி, இவற்றுடன் சிவபெருமானின் சிறந்த மஞ்சத்தின் மீது உனது இடுப்பு சாய்ந்தமர்ந்துள்ளது. அதனைத் தியானிக்கிறேன். (69)*

गर्भे निवेश्य भुवनानि चतुर्दशापि
संरक्षितुं कलितनिश्चित(श्रय)या भवत्या।
प्राकारमेव रचितं परितोऽपि नूनं
ऊहे सुवर्णमयमेदुरपट्टबन्धम् ॥ ७० ॥

*பதினான்கு புவனங்களையும் கருவறையில் வைத்துக் காக்க நிச்சயம் செய்த உன்னால் தங்கமயமான பட்டியை அணிவதன்மூலம் சுற்றிப் பிராகாரமே அமைக்கப் பெற்றுள்ளது. இது நிச்சயம்.*

मुक्ताश्च खल्वपि यदि त्रिपुरे भवत्याः
स्तन्याशया स्तनतटं न परित्यजन्ति।
अस्माकमुद्भटभवज्वरतापितानां
आर्द्रीभवन्तु वदनानि कुतो न हेतोः ॥ ७१ ॥

மார்பு- *திரிபுரங்களின் தலைவியே ! முக்தி பெற்றவரும் (முத்தாரத்தில் உள்ள முத்துகளும்) உன் மார்பின் மீது முலைப்பால் பருக விரும்பி மார்பகத்தை விட்டகலுவதில்லை. கொடிய பிறவித்தீயால் எங்களது வாய்களிலும் அந்தப்பாலை ஊட்டி ஈரப்படுத்தக் கூடாதோ? (முத்தாரத்தில் முத்துக்களும் மார்பை விட்டகலுவதில்லை. முக்தர்களும் அவ்வாறே. முக்தா:- முத்துக்கள் - முக்தி பெற்றவர்கள்.) (71)*

नष्टोपलब्धमधिगत्य शिशुं चिरान्मां
वात्सल्यविद्रुतहृदः परदेवतायाः।
क्लिद्यत्पयोधरविनिःसृतदुग्धबिन्दु-
निष्यन्दपङ्क्तिरिव दीव्यति हारयष्टिः ॥ ७२ ॥

*எங்கோ கெட்டுத் தொலைந்திருந்த சிசுவான என்னைத் தேடிக் கண்டுபிடித்த பரதேவதையான உனக்கு என்னிடம் உள்ள பரிவால் உள்ளம் நெகிழ்ந்து பால் சொட்டு சொட்டாய் சுரந்து வெளியாகி முத்து முத்தாய் மார்பில் தெரிகிறது. அதுவே முத்தாரமாக விளங்குகிறது. (72)*

यत्तद्धनुर्जनमनोमयमैक्षवं ते
तस्यास्तु देवि हृदयं मम मूलदेशः ।
चापाधिरोपणविधौ चरणाञ्चलेन
संभाव्यते किल समाक्रमणं कदाचित् ।। ७३ ।।

*ஆயுதங்கள்- தேவி ! மக்கள் மனமே உருவான உன் கரும்பு வில்லின் வேர்ப்பகுதியில் என் உள்ளம் நிலைக்கட்டும். அந்த வில்லை நாணேற்றும் போது சரணத்தின் நுனி வில்லின் கீழ்ப்பகுதியை அழுத்திப் பிடிக்கும். (73)*

आस्थाय दारुणतरं कमपि स्वभावं
अत्यन्तदुष्कृतकृतामपि शिक्षणाय ।
गृह्णासि सायकपदे कुसुमान्यमूनि
मातः सुतेषु महती किल रूक्षतेयम् ।। ७४ ।।

*கொடிய செயலைச் செய்தவரை சிக்ஷிப்பதற்காக மிகக் கொடிய ஸ்வபாவத்தை ஏற்று இந்தப் புஷ்பங்களை அம்புகளாக எடுத்திருக்கிறாயே ! தாயே ! உன் குழந்தைகளின் விஷயத்தில் இதுவும் கொடுமையே ! (74)*

पाशं सृणिं च करयोस्तव भावयन्तः
संस्तम्भयन्ति वशयन्ति च सर्वलोकान् ।
चापं शरं च सकृदम्ब तव स्मरन्तो
भूपालतां दधति भोगपथावतीर्णाः ।। ७५ ।।

*அம்மா ! உலக சுகத்தை நாடுபவர் உன் இரு கைகளிலுள்ள பாசத்தையும் துறட்டியையும் உருவகப் படுத்தித் தியானித்து உலகனைத்தையும் ஸ்தம்பிக்கச் செய்து, வசப்படுத்துவர். போகத்தை நாடுபவர் வில்லையும் அம்பையும் தியானித்து அரசராவர். (75)*

पाशाङ्कुशौ तव करे परिचिन्त्य राग-
द्वेषौ जयन्ति परमार्थविदस्तु धन्याः ।
एकत्र चापमितरत्र शरं च मत्वा
व्यावर्तयन्ति हृदयं विषयान्धकूपात् ॥ ७६ ॥

*தத்துவமுணர்ந்த பாக்கிய சாலிகள், பாசத்தையும் துறட்டியையும் உன் கைகளிலிருப்பதாகத் தியானித்து விருப்பு-வெறுப்புகளை வெல்கிறார்கள். ஒரு கையில் வில்லும் மற்றொருகையில் அம்பும் கொண்டவளாகத் தியானித்து வெளிப்பொருள் நாட்டமெனும் பாழும் கிணற்றிலிருந்து உள்ளத்தை மீட்கின்றனர். (76)*

उत्क्रान्तमान्तरमिदं करणं जनानां-
अप्येति चन्द्रमिति हि श्रुतयो वदन्ति ।
आस्तामिदं मम तु देवि मनोऽधुनैव
लीनं दृढं वदनचन्द्रमसि त्वदीये ॥ ७७ ॥

*முகம்- மக்களின் உயிர் நீங்கியதும் உள்ளம் சந்திரனைச் சென்றடைவதாக வேதங்கள் கூறுகின்றன. இது சரியானதாக இருக்கட்டும். தேவி ! என் மனமோ இப்போதே உன் முகமாகிய சந்திரனிடம் நன்குலயமடைந்துவிட்டது. (மனம் எனும் தத்துவத்தின் அதிதைவம் சந்திரன். உடலுடன் உறவுபெறாத மனம் தன் மூலப்பொருளிடம் சென்றடங்கு கிறது). (77)*

विद्यात्मनो जननि तावकदन्तपङ्क्तेः
वैमल्यमीदृगिति वर्णयितुं क्षमः कः ।
तत्संभवा यदमला वचसां सवित्री
तन्मूलकं कवियशोऽपि ततस्तरां यत् ॥ ७८ ॥

*தாயே ! உன் பற்கள் 32 வித்யாஸ்தானங்களின் உருவகம். அவற்றின் தூய்மையை இத்தகையதென வர்ணிக்க இயலாது. அவற்றில் தோன்றிய ஸரஸ்வதி*

*அப்பழுக்கற்றவள். அவளது அருளாலான கவிகளின் புகழ் அவளைவிடத் தூய்மை மிக்கது. (தூய்மையின் நிறம் வெண்மை). (78)*

स्वच्छापि ते वहति यत्किल दन्तपङ्क्तिः
स्वच्छन्दनिर्दलितदाडिमबीजशोभाम्।
तन्मे रजोव्यतिकराधिकपाटलिम्नि
चित्ते परं परिचयादिति चिन्तयामि ॥ ७९ ॥

*உன் பல் வரிசை தூய வெண்ணிறம் கொண்டதெனினும் தானே முதிர்ந்து வெடித்த மாதுள விதைகளின் செம்மை கலந்தது. ரஜோகுணக்கலப்பால் அதிகம் சிவந்த என் மனத்துடன் அதிகத் தொடர்பால் அந்தச் செம்மை பரவியது என நினைக்கிறேன். (எகிறுகளின் செம்மையும் உதடுகளின் செம்மையும் பற்களில் பிரதிபலிக்கின்றன.) (79)*

अर्धं जितत्रिपुरमम्ब तव स्मितं चेद्
अर्धान्तरेण च तथा भवितव्यमेव।
तच्चिन्तये जननि कारणसूक्ष्मरूप-
स्थूलात्मकत्रिपुरशान्तिकृते स्मितं ते ॥ ८० ॥

*அன்னையே ! உன் சிரிப்பின் பாதி திரிபுரத்தை வென்றது. (சிவன் சிரித்துத் திரிபுரத்தை அழித்தார்.) மற்றொரு பாதியும் அத்தகையதாகவே இருக்கவேண்டும். அதனால் எனது காரண சரீரம், ஸூக்ஷ்மசரீரம், ஸ்தூல சரீரம் என்ற முப்புரங்களையும் வெல்ல உன் புன் சிரிப்பைத் தியானிக்கிறேன். (80)*

मत्क्लेशदर्शनपरिद्रवदन्तरङ्ग-
हैयङ्गवीनपरिवाहनिभं जनन्याः।
अन्तस्तमोऽपहमनुस्मरतां जनानां
मन्दस्मितं तव तु मङ्गलमस्तु भूत्यै ॥ ८१ ॥

*எனது துயரத்தைக் கண்டு உள்ளம், உருகிய வெண்ணெய் போலாகிப் பெருகிவெளிப்படுவது போன்ற தாயான உனது புன் சிரிப்பு தன்னைத் தொடர்ந்து நினைக்கிற மக்களின் உள்ளத்து இருட்டை அகற்றி எனக்கு மங்களம் தரட்டும். (81)*

**सांसिद्धिकाननसरोरुहदिव्यगन्ध-**
**सान्द्रीकृतेन्दुशकलाकलिताधिवासम्।**
**ताम्बूलसारमखिलागमबोधसारं**
**मातर्विधेहि मम वक्त्रकलाचिकायाम्॥ ८२॥**

*தாயே ! உன் முகத்தாமரையின் தெய்விக நறுமணம் இயல்பாகவே அமைந்தது. அந்த நறுமணத்துடன் நெகிழ்ந்த அதில் பச்சைகர்பூரமணம் கலந்த தாம்பூலக் கலவையின் மணம் கலந்தது. அந்த மணமிக்க தாம்பூலச் சாற்றை என் வாயாகிற வட்டிலில் உமிழ்வாயாக. அது வேதங்கள் அனைத்தின் ஜ்ஞானமாகிய அமுதமல்லவா ? (82)*

**नासामणिस्तव शिवे चिरसंस्तवेन**
**प्रत्याहृते मनसि भाति तपोधनानाम्।**
**अज्ञानसंततिनिशात्ययसूचनार्थं**
**आविर्भवन्त्यसुरदेशिकतारकेव॥ ८३॥**

*மங்களமானவளே ! வெகுநாட்களாகப் பெற்ற யோகப் பயிற்சியால் மனமடங்கிய முனிவர்களின் உள்ளத்தில் உன் மூக்குத்தி பதிந்துள்ளது. அறியாமையின் தொடராகிய இருள்மிக்க இரவு முடிந்து விட்டதை அறிவிக்கிற விடி வெள்ளியோ (சுக்ரனோ) அது என எனக்குத் தோன்றுகிறது.*

**ताम्बूलगर्भपरिफुल्लकपोललक्ष्य-**
**ताटङ्कमौक्तिकमणिप्रतिबिम्बदम्भात्।**
**अस्तद्वयव्यतिकरामलसत्त्वमाद्यं**
**वर्णं बिभर्ति जठरे तव वक्त्रबिम्बम्॥ ८४॥**

தாம்பூலம் நிறைந்துள்ளதால் உப்பிய கன்னத்தில் காதணியின் முத்துமணி பிரதிபலிக்கிறது. எல்லா ஒலிகளுக்கும் முதலில் தோன்றிய ஓம் என்ற எழுத்தை உன்முகம் தன் வயிற்றில் தாங்குகிறதோ ? அந்த ஓங்காரம் அத்வைத நிலையின் தூய வடிவமல்லவா ? (84)

**दत्ते श्रियं बहुविधां कुशलानि दत्ते**
**दत्ते पदं सुरपतेरपि लीलयैव ।**
**ईदृग्विधाऽम्ब तव दृष्टिरितोऽधिका वा**
**नाद्यापि कर्णमतिवर्तितुमीश्वरीयम् ।। ८५ ।।**

தாயே ! உனது கடைக்கண்பார்வை செல்வத்தை வழங்குகிறது. நல்வாழ்வை அளிக்கிறது. இந்திரனின் பதவியையும் எளிதாகத் தருகிறது. இத்தகையதும், ஏன், இதைவிட அதிகமாக அருள்புரிவதுமான உன்பார்வை காதை (கர்ணத்தைத்) தாண்டிச் செல்ல முடியாது. (காதளவு நீண்ட கடைக்கண்பார்வை-காதுகளைத் தாண்டாது. கர்ணன் கொடையில் புகழ் பெற்றவன். உன் புகழ் அவன் புகழை விஞ்சாதோ எனச் சிலேடை) (85)

**पाषाणकूटकठिने जनदुर्विगाहे**
**व्यर्थं महत्युपनिषद्विपिने प्रवृत्ता ।**
**सेव्येत केन तव लोचनचन्द्रिकेयं**
**एनां निपातय सकृन्मयि तप्यमाने ।। ८६ ।।**

கற்குவியல் போன்று கடினமான தடமுள்ளதும் மக்களால் எளிதில் நுழைய முடியாததுமான உபநிஷத் என்ற பெருங்காட்டில் வீணே பாய்கிற பார்வையாகிற நிலவு எவருக்கும் பயன்படாதே. (உபநிஷதக் காட்டில் அவள் விளையாடுபவள்- உபநிஷதுத்யான கேலிகலகண்ட்டீம்'' என்பார் காளிதாஸன்). அதற்குமாறுகக் தவிக்கின்ற என் மீது ஒரு கணம் படரட்டுமே ? (காட்டில் விழுகிற நிலவொளி வீணுகிறது. உபநிஷத் என்ற காட்டில் என்னைப் போன்றவர்

*தடம்பதிக்க இயலாது. பாறை போன்ற வரட்டு ஜ்ஞானிக்கு தேவியின் மென்மை எனும் நிலவொளியை அனுபவிக்க இயலாது. என்னைப் போன்ற எளியவன் மீது உன் பார்வை எனும் நிலவொளி பாயட்டுமே ? )(86)*

**कामं शिवेन शमितं पुनरुज्जगार**
**दृष्टिस्तवेति किमियं जननि स्तुतिस्ते ।**
**लीलाप्रसूतपुरुषार्थचतुष्टयायाः**
**तस्याः परं तु स भवत्यवयुत्यवादः ॥ ८७ ॥**

*தாயே ! சிவனால் அழிந்த மன்மதனை (காமத்தை) உன் கடைக் கண்பார்வை உயிர்ப்பித்தது என்பது முழுமை பெற்ற பாராட்டு மொழியல்ல. விளையாட்டாகவே தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நாடத்தக்கதனைத்தையும் தந்தருள்கிற உன் பார்வையை காமம் ஒன்றை மட்டும் தருவது என்பது உள்ளதைக் குறைத்துக் கூறுவதாகாதா ? (87)*

**सोमो जगज्जनयितेति यदाह वेदो**
**नेदं लतापरमिति भ्रमितव्यमार्यैः ।**
**यः शैववामतनुवर्तिभवद्दृगात्मा**
**चन्द्रो जगत्सृजति तत्पर एष वादः ॥ ८८ ॥**

*ஸோமன் உலகைத் தோற்றுவித்தவன் என வேதம் கூறும். அந்த ஸோமன் என்பது ஸோமலதை என்ற கொடி என்று பெரியோர் குழம்ப வேண்டியதில்லை. சிவனது இடது பக்கத்திலமர்ந்த உனது கண்ணாகிய சந்திரனே உலகைப்படைப்பவன். அவனையே ஸோமன் என வேதம் கூறுகிறது. (ஸோம:- இடது கண்ணாக உமையிடம் உள்ளவன்.) (88)*

**सूच्यग्रवद्वसुमतीमणुवच्च मेरुं**
**दृष्टिर्यदम्ब तव पश्यति दानशौण्डा ।**
**दृष्टास्त्वया वयमपीह ततः स्मरामो**
**वेशान्तमेव भवसागरमुत्तरङ्गम् ॥ ८९ ॥**

*தாயே ! தானம் வழங்குவதில் தேர்ந்த உன் பார்வை பூமியை ஊசிமுனையளவிலும் மேருவை அணுவளவிலும் பார்க்கிறது. அந்தப் பார்வையில் பட்ட நாங்களும் அலைமோதுகிற பிறவிக்கடலை சிறுகுட்டையாக எண்ணுகிறோம். (தேவியின் பார்வை பூமி முழுவதையும் ஒருவனுக்கு அளிக்கும். ஆனால் ஊசி முனையளவு கொடுத்ததாக நினைக்கும். அந்தப் பெருவள்ளல் தன்மைபெற்ற பார்வை எம்மீது பட்டதால் கடலைக் குட்டையாக மதிக்கிறோம்.) (89)*

**वाणीनिकेतनतया घनसारगौराः**
**कह्लारकेसररुचः कमलानुषङ्गात् ।**
**मातर्जयन्ति शरणागतलोकचेतो-**
**मालिन्यमार्जनवशादसिताः कटाक्षाः ॥ ९० ॥**

*உன் கடைக்கண் பார்வைகள் ஸரஸ்வதியின் இருப்பிடமானதால் கர்பூரம் போன்று வெண்ணிறம் கொண்டுள்ளன. லக்ஷ்மியுடன் சேர்ந்ததால் செவ்வல்லிக் கோது போல செம்மை கொண்டவை. தன்னைச் சரணடைந்தவரின் உள்ளத்து மாசைத் துடைப்பதால் கருமை கொண்டவை. இத்தகைய கடைக்கண்பார்வை மிக அழகாக உள்ளது. (வெண்மை செம்மை கருமை என்ற கண்ணின் நிறம் பார்வையில் வெளிப்பட்டு அறிவையும் செல்வத்தையும் தூய்மையையும் தருகிறது.) (90)*

**आकर्णमुल्लसति मातरपाङ्गदेशे**
**कालाञ्जनेन घटिता तव भाति रेखा ।**
**शैवालपङ्क्तिरिव संततनिर्जिहान-**
**कारुण्यपूरपदवीकलितानुबन्धा ॥ ९१ ॥**

*தாயே ! காது வரை நீண்ட உன் கடைக்கண் பகுதியை ஒட்டிக் கருத்தமையாலிட்ட கோடு தெரிகிறது. எப்போதும்*

பெருகுகிற கருணை வெள்ளத்தில் கரும்பாசிவரிசை போல் அது காணப்படுகிறது. (91)

विश्वं सृजत्यवति हन्ति च यत्कटाक्षो
विश्वस्यतां कथमसौ चपलस्वभावः ।
एषोऽपि यामनुसरल्लँभते यशांसि
तामेव विश्वसिमि देवि तवानुकम्पाम् ।। ९२ ।।

உன் கடைக்கண்பார்வை உலகைப் படைக்கிறது; காக்கிறது; அழிக்கிறது. நிலையற்று இயங்கும் இயல்புள்ள இதனை எப்படி நம்புவது ? தேவி ! இந்தப்பார்வையும் உன் தயையைப் பின்பற்றித் தான் புகழ்பெறுகிறது. உன் கண்களில் ததும்பிநிற்கிற அந்தத் தயையையே நான் நம்புகிறேன். (92)

अर्धं कलङ्करहिता करुणैव शंभोः
अर्धं गुणास्तदितरे सकलाः समेताः ।
इत्यम्ब संप्रति किल स्फुरितं रहस्यं
संपश्यतो मम भवन्मयमैशमर्धम् ।। ९३ ।।

நீயாகக் காணப்படுகிற உடலின் பாதியையும் சிவனுகத் தெரிகிற உடலின் பாதியையும் உற்றுநோக்கிய எனக்கு ஒரு ரஹஸ்யம் புரிந்தது. சிவனது அப்பழுக்கற்ற கருணை நீயாகிய பாதி உடல். மற்ற குணங்களனைத்தும் சிவனுகியபாதி. (கருணையின் நிறம் சிகப்பு. குணங்களின் நிறம் வெளுப்பு. அர்த்தநாரீச்வர நிலையில் இடது பகுதி சிவந்தது. வலப்பகுதி வெண்ணிற முள்ளது.) (93)

अम्ब भ्रुवोस्तव विचेष्टितमप्रमत्तं
संपश्यतां निजनिजार्थनिदेशहेतोः ।
तन्मूलदेशनिहिता निभृता सुराणां
दृष्टिः प्रयाति मृगनाभिविशेषकत्वम् ।। ९४ ।।

அன்னையே ! உன் புருவங்களின் அசைவு விதவிதமான தேவர்களுக்கான அவரவரது பணிகள் பற்றிய உத்தரவாகும். தம் தமது பணிக்குரிய உத்தரவென கவனக்குறைவின்றி உற்றுநோக்குகிற தேவர்களின் பார்வை குவிந்து புருவங்களின் கூடுமிடமாகிய நடுப்பகுதியில் அசைவற்றுப் பதிகின்றன. அவையே கஸ்தூரியாலான திலகமாகின்றன. *(94)*

**सारं कणं कणमघर्मरुचां सहस्रात्**
**संगृह्य निर्मितमिदं तव वक्त्रबिम्बम् ।**
**तावत्सुधाकरकलङ्ककुलानि पश्चाद्**
**अन्यत्र देवि निहितानि कचापदेशात् ॥ ९५ ॥**

தேவி ! குளிர்ந்த கிரணங்களுள்ள ஆயிரம் சந்திரர்களின் ஸாரத்தைச் சேமித்து உன் முகம் அமைக்கப்பட்டுள்ளது. அத்தனை சந்திரர்களின் களங்கப்பகுதிகள் கேசங்கள் என்ற பெயரில் பின் புலமாக வைக்கப்பட்டுள்ளன. *(95)*

**विन्यस्तमिन्द्रमणिकन्दलसुन्दरेषु**
**केशेषु ते स्फटिकनिर्मलमिन्दुखण्डम् ।**
**आधारसंगतिवशादसितायमानं**
**इन्दीवरच्छदवतंसदशां बिभर्ति ॥ ९६ ॥**

இந்திர நீலக்கற்களின் அழகிய காந்தியுடன் உள்ள உனது கூந்தலில் செருகப்பட்ட படிகம் போன்ற தூய்மைமிக்க சந்திரனின் துண்டு, தனக்கு அடித்தளமாக அமைந்த கூந்தலின் சேர்க்கையால் கறுமை பெற்று நீல அல்லிப் பூவிதழாலான அணியாகியுள்ளது. *(96)*

**चिन्तामणिस्त्रिभुवनेश्वरि कौस्तुभश्च**
**ख्यातौ मणी तव गृहाङ्गणकुट्टिमस्थौ ।**
**किं रत्नमन्यदुपलभ्य किरीटकोटिं**
**वाचस्पतिप्रभृतयस्तव वर्णयन्तु ॥ ९७ ॥**

*மூவுலகின் அரசியே ! சிந்தாமணி கௌஸ்துபம் என்ற இரு ரத்தினங்கள் உலகில் புகழ் பெற்றவை. அவை உனது வீட்டுச் சிற்றறைச் சுவற்றில் பதிக்கப்பட்டுள்ளன. கிரீடப்பகுதியில் உள்ள ரத்தினங்களை இது என்ன ரத்தினம் என பிருஹஸ்பதி முதலானோர் விளக்கட்டும். (சிறு அறையின் சுவற்றில் கௌஸ்துபமும் சிந்தாமணியும் பதிக்கப்படுமானால் கிரீடத்தில் பதித்துள்ளதை மதிப்பிட எவரால் முடியும் !) (97).*

**प्रादुर्भवत्तरणिबिम्बशतारुणानि**
**पर्याप्तशीतकिरणायुतशीतलानि ।**
**शृङ्गारसारपरिवाहमयानि मातः**
**अङ्गानि केऽपि चरमे जनुषि स्मरन्ति ॥ ९८ ॥**

*தாயே ! உதிக்கின்ற நூறு சூரியர்களைப் போல் சிவந்த உன் அங்கங்கள் பத்தாயிரம் சந்திரர்களின் குளிர்ச்சி யுள்ளவை. சிருங்காரத்தின் (அழகின்) ஸாரத்தின் வெள்ளப் பெருக்கானவை. ஏதோ சிலரே அவற்றைத் தம் கடைசிப் பிறவியில் (முக்திக்கு முன்னர்) நினைக்கின்றனர். (அவர்களுக்கு மறுபிறப்பில்லை) (98)*

**प्रत्यग्रकुङ्कुमरसाकलिताङ्गरागं**
**प्रत्यङ्गदत्तमणिभूषणजालरम्यम् ।**
**ताम्बूलपूरितमुखं तरुणेन्दुचूडं**
**सर्वारुणं किमपि वस्तु ममाविरस्तु ॥ ९९ ॥**

*புதிய குங்குமப்பூக் குழம்பாலான நறுமணப் பூச்சு பூசியதும், ஒவ்வொரு அங்கத்திலும் ரத்தின ஆபரணங்கள் பூண்டதும், தாம்பூலத்தை வாய் நிறைய நிரப்பிக் கொண்டதும், இளஞ்சந்திரனைச் சிரஸில் சூடியதும், எங்கும் சிவந்து காண்பதுமான அந்த அதிசயப்பொருள் என்முன் தோன்றட்டும். (99)*

अर्धं स्त्रियस्त्रिभुवने सचराचरेऽस्मिन्
अर्धं पुमांस इति दर्शयितुं भवत्या ।
स्त्रीपुंसलक्षणमिदं वपुरावृतं यत्
तेनासि देवि विदिता त्रिजगच्छरीरा ॥ १०० ॥

*அசைவதும் அசையாததுமான பொருளாலான மூவுலகிலும் பெண்கள் பாதியும் ஆண்கள் பாதியும் என்பதைக் காட்ட பெண்ணும் ஆணுமான உனது உருவம் உலகால் மறைக்கப்பட்டுள்ளது. அதனால் மூவுலகாலான உடல் கொண்டவள் என உலகம் உன்னைப் புரிந்து கொண்டுள்ளது. ( நீ தெரிந்தால் உலகம் தெரியாது. உலகம் தெரிந்தால் நீ தெரியமாட்டாய்.) (100)*

निर्मासि संहरसि निर्वहसि त्रिलोकीं
वृत्तान्तमेतमपि वेत्ति न वा महेशः ।
तस्येश्वरस्य गिरिजे तव साहचर्यात्
जातः श्रुतिष्वपि जगज्जनकत्ववादः ॥ १०१ ॥

*மூவுலகையும் படைக்கிறாய்; ஒடுக்குகிறாய்; தாங்குகிறாய் என்ற இந்த உண்மையை மகேசரும் அறிவாரோ, அறியமாட்டாரோ ? மலைமகளே ! அந்த ஈசனுக்கு உனது கூட்டுறவால் தான் உலகின் தந்தை என்ற அறிமுகம் வேதத்திலும் உண்டானது. (101)*

सत्ताऽस्यखण्डसुखसंविदसि त्रिलोकी-
सर्गस्थितिप्रतिहृतिष्वपि निर्व्यपेक्षा ।
त्वामन्तरेण शिव इत्यवशिष्यते किं
अर्धं शिवस्य भवतीत्यनभिज्ञवादः ॥ १०२ ॥

*நீயே உண்மையில் பேரிருக்கை. நீயே துண்டாடப் பெறாத பேரானந்த உணர்வு. மூவுலகையும் படைக்கவும் தாங்கவும் ஒடுக்கவும் பிறரது உதவி எதிர்பாராமல்*

செயல்படுபவள். உன்னையல்லால் சிவன் என்று ஒன்று மிஞ்சியிருக்குமா ? நீ சிவனின் பாதி என்பது அறிவிலியின் கூற்று. (102)

नास्मिन् रविस्तपति नात्र विवाति वातो
नास्य प्रवृत्तिमपि वेद जगत्समस्तम्।
अन्तःपुरं तदिदमीदृशमन्ध(न्त)कारेः
अस्मादृशास्तु सुखमत्र चरन्ति बालाः ॥ १०३ ॥

இங்கு (சிவனது அந்தப்புரத்தில்) சூரியன் ஒளிர்வதில்லை. காற்று வீசுவதில்லை. இங்கு நடப்பதை உலகம் அறியாது. அந்தகாஸுரனின் (யமனின்) எதிரியான அந்த சிவனது அந்தப்புரம் அத்தகையது. ஆனால் எம்மைப் போன்ற சிறுவர்கள் அங்கு சுகமாக நடமாடுவர். (103)

त्वत्संनिधानरहितो मम मास्तु देशः
त्वत्तत्त्वबोधरहिता मम मास्तु विद्या।
त्वत्पादभक्तिरहितो मम मास्तु वंशः
त्वच्चिन्तया विरहितं मम मास्तु चायुः ॥ १०३ ॥

உன் அருகாமையற்ற தேசம் எனக்கு வேண்டாம். உன் உண்மையான நிலையை விளக்காத கல்வி எனக்கு வேண்டாம். உன் திருவடிகளில் பக்தி கொள்ளாத வம்சம் எனக்கு வேண்டாம். உன் நினைவில்லாத ஆயுள் எனக்கு வேண்டாம். (104)

त्वं देवि यादृगसि तादृगसि त्वमीदृग्
एषेति वक्तुमिव बोद्धुमपि क्षमः कः।
मामेव तावदविदन्नतिपामरोऽहं
मातः स्तुतिं त्वयि समर्पयितुं विलज्जे ॥ १०५ ॥

நீ எவ்வாறு உள்ளாயோ அவ்வாறு உள்ளாய்- நீ இவ்வாறு உள்ளாய் எனச் சொல்லவோ அவ்வாறு

சொன்னதைப் புரிந்து கொள்ளவோ தகுதி எவருக்கு உள்ளது ? என்னையே இத்தகையவன் என உணராத அறிவிலி நான். தாயே ! உன்னிடம் இந்தத் துதியைக் காணிக்கையாக முன் வைக்க வெட்கப்படுகிறேன். (105).

काचित्कृता कृतिरिति त्वयि साऽर्पितेति
कापि प्रमोदकणिका न ममान्तरङ्गे ।
मौढ्यं मदीयमिह यद्विदितं ममैव
किं त्वम्ब विश्वसिमि दीनशरण्यतां ते ॥ १०६ ॥

ஏதோ ஒன்று என்னுல் இயற்றப்பட்டதென்றும் உனது முன்னர் அர்ப்பணம் செய்யப்பட்டதென்றும் என் உள்ளத்தில் ஏதோ ஒரு மன நிறைவின் துளிகூட ஏற்படவில்லை. என் அறியாமை எனக்குத் தெரிந்ததே. அம்மா ! நீ எளியவருக்குப்புகலிடமாயுள்ளதை நம்புகிறேன்.

कालानपास्य विषुवायनसंक्रमादीन्
अस्तंगते हिमकरे च दिवाकरे च ।
अम्ब स्मरेयमपि ते चरणारविन्दं
आनन्दलक्षणमपास्तसमस्तभेदम् ॥ १०७ ॥

தாயே ! விஷுவம், அயனம், ஸங்க்ரமணம் முதலிய காலவரைகளை உதறிவிட்டு, சந்திரனும் ஸூரியனும் மறைந்தபோது, வேற்றுமையுணர்வில்லாத ஆனந்த வடிவான உன் திருவடித்தாமரையை நினைப்பேனே ? (உடலும் உள்ளமும் அடங்கியதும் வெளியே வேற்றுமையை உணர்த்துகிற தேசகாலவரை தானே மறையும். அப்போது ஒரே மூடநிலையாக இல்லாமல் பேரொளியும் பேரிருக்கையும் பேரறிவும் பேரானந்தமு மான தேவியின் திருவடிகள் காணப்பெறுமா?) (107)

चतुरध्यायीरूपं कलहंसव्यञ्जनं जगन्मातुः ।
अपरब्रह्ममयं वपुरन्तः शशिखण्डमण्डनमुपासे ॥ १०८ ॥

நான்கு அத்தியாயங்கள் கொண்ட பிரும்ஹ ஸூத்ரங்கள் என்ற உலகத்தாயின் வடிவம் ஹம்ஸர்களை (ஜ்ஞானிகளான அன்னபக்ஷிகளை)த் தம் அடையாளமாகக் கொள்ளும். (ஸமாதி நிலையில் அவர்களால் உணரப்பெறுகிற பிரும்ஹம் அது.) சந்திரனது துண்டை அணியாகக் கொண்ட தேவி அபரப்ரம்ஹ வடிவம். அதனை உள்ளத்தில் வழிபடுகிறேன். (108)

इति श्रीनीलकण्ठदीक्षितविरचितः आनन्दसागरस्तवः संपूर्णः ॥

# श्यामासपर्याक्रमः

(श्रीललितामहात्रिपुरसुन्दर्याः प्रधानसचिवपदम-लङ्करोति श्यामा । तदुपासनद्वरा श्रीविद्या शीघ्रं प्रसी-दति । यथा राजदर्शनोत्सुका आदौ प्रधानसचिवमुपसेव्य तत्द्वारा राजदर्शनं कुर्वन्ति, तथैव श्यामायाः प्रथमं उपासनं न्याय्यम् । प्रधानद्वारा राजप्रसादनं हि न्याय्यम् इति परशुरामः । श्रीमान् साधकः श्यामलां देवीमारिराधयिषुः श्रीक्रमोक्तक्रमेण काल्यकृत्याह्निके निर्वर्तयेत् । अत्र विशेषः - श्रीगुरुपादुकायामादौ त्रितारीस्थाने बालायोगः । सर्वकारणभूतायाः सम्विदश्चिन्तनं मूलाधारादि-द्वादशान्ताख्यललाटोर्ध्व-भागावधिकम् । तत्र तत्र यथोचितं सम्बुद्ध्यादीनामूहः । आदित्यमण्डले सङ्गीतयोगिन्या भावनम् । मूलेन अर्घ्यदानम् ।

## यागमन्दिरप्रवेशः

अपराह्णे श्यामापूजा करणीया । अथापराह्णे यागमन्दिरमागत्य द्वारस्थण्डिलं गोमयेनोपलिप्य

यागगृहञ्च रङ्गवल्लीपुष्पमालावितानकादिभिश्चालङ्कृत्य द्वारस्य दक्षवाम शाखयोः ऊर्ध्वभागे च क्रमेण-(३ बालामनुः)

ऐं क्लीं सौः भद्रकाल्यै नमः, ३ भैरवाय नमः, ३ लम्बोदराय नमः, इति तिस्रो द्वारदेवताः सम्पूज्य, अन्तः प्रविष्टः, ३ रक्तद्वादशशक्तियुक्ताय दीपनाथाय नमः, इति पुष्पाञ्जलिना भूमौ दीपनाथमिष्ट्वा सपर्यासामग्रीं स्वस्य दक्षभागे निधाय दीपानभितः प्रज्वाल्य गन्धमाल्यादि-भिरलङ्कृतात्मा ताम्बूलेन जातीपत्रफललवङ्गैला-कर्पूराख्यपञ्चतिक्तेन वा सुरभिलवदनः सुप्रसन्नमनाः स्वास्तीर्णे शुचिनि ऊर्णामृदुनि बालातृतीयबीजेन द्वादशवारमभिमन्त्रिते मूलमन्त्रोक्षिते आसने ३ आधार-शक्तिकमलासनाय नमः, इति प्राङ्मुख उदङ्मुखो वा पद्मासनाद्यन्यतमेनासनेनोपविश्य ३ समस्तगुप्त-प्रकटयोगिनी-चक्रदेवताश्रीपादुकाभ्यो नमः, इति मूर्ध्नि बद्धाञ्जलिः स्ववामदक्षपार्श्वयोः क्रमेण ओं ऐं क्लीं सौः ह्स्ख्फ्रें हसक्षमलवरयूं सहक्षमलवरयीं ह्सौः स्हौः.......आनन्दनाथश्रीपादुकां पूजयामि नमः इति गुरुपादुकया श्रीगुरुं, ओं श्रीं ह्रीं क्लीं ग्लौं गं गणपतये वर वरद सर्वजनं मे वशमानय स्वाहा इति महागणपतिमन्त्रेण गणपतिं च प्रणम्य, ऐं हः अस्त्राय फट् इति मन्त्रेण मुहुरावृत्तेन अङ्गुष्ठादिकरतलान्तकूर्परयोश्च विन्यस्य देहे च व्यापकं कृत्वा स्वस्य देवतैक्यं भावयन्, ऐं क्लीं सौः अपसर्पन्तु ते भूता ये भूता भुवि संस्थिताः । ये भूता विघ्नकर्तारस्ते गच्छन्तु शिवाज्ञया इति मन्त्रं सकृदुच्चार्य युगपद्वामपार्ष्णिभूतलत्रिरा-घातकरास्फोटत्रयक्रूरदृष्ट्यवलोकनपूर्वकं तालत्रयेण भौमान्त-

रिक्षदिव्यान् भेदावभासकान् विघ्नानुत्सारयेत्। तालत्रयं नाम, दक्षतर्जनीमध्यमाभ्यामधोमुखाभ्यां वामकरतले सशब्दमुपर्युपरि त्रिरभिघातः । (३-ऐं क्लीं सौः) अथ ३ 'नमः' इत्यङ्गुष्ठ-मन्त्रमुच्चार्य अङ्कुशेन शिखां बद्ध्वा भूतशुद्धिं[1] आत्मप्राणप्रतिष्ठां च विदध्यात्[2]। मूलेन विंशतिधा षोडशधा दशधा सप्तधा त्रिधा वा प्राणानायम्य, तेजोरूपदेवीमयं भावयन्नात्मानं, निजदेहे न्यासजालात्मकं वज्रकवचं धारयेत्।

## १. षडङ्गन्यासः-

ऐं ह्रीं श्रीं ऐं क्लीं सौः, ऐं, सर्वजनमनोहरि हृदयाय नमः।

७ सर्वमुखरञ्जिनि शिरसे स्वाहा।

७ क्लीं ह्रीं श्रीं सर्वराजवशङ्करि शिखायै वषट्।

७ सर्वस्त्रीपुरुषवशङ्करि कवचाय हुम्।

---

*1.* भूतशुद्धिः- लं(१०) वं(२०) रं (३०) यं (४०) हं (५०) इति (प्राणायामः ।) मूल शृङ्गाटकात् कुण्डलिनीं उत्थापयामि । ओं हंसः सुषुम्नापथेन जीवशिवं परमशिवेन योजयामि नमः । हंसः सोऽहं हंसः । लं पृथिवीमप्सु प्रविलापयामि । वं अपः अग्नौ प्रविलापयामि । रं अग्निं वायौ प्रविलापयामि । यं वायुं आकाशे प्रविलापयामि । हं आकाशं जीवे प्रविलापयामि । (इडया पूरकेण) यं (१६) पापपुरुषं शोषयामि । (पिङ्गलया पूरकेण) रं (१६) पापपुरुषं दहामि । (इडया पूरकेण) वं (१६) परमशिवामृतं वर्षयामि । (पिङ्गलया पूरकेण) (वं १६) परमशिवामृतं वर्षयामि । (पिङ्गलया पूरकेण) शांभवं पुण्यपुरुषं उज्जीवयामि । जीवादाकाशं वायुमग्निं अपः पृथिवीं च पुण्यपुरुषेण योजयामि । तं मूलाधारे स्थापयामि । हं सः सोऽहं अवतर शिवपदात् जीव प्रविश मूलशृङ्गाटकं उल्लसोल्लस । ज्वल ज्वल प्रज्वल प्रज्वल हंसः सोऽहं सोऽहं स्वाहा । (हृदि दक्षकरं निधाय) ऐं क्लीं सौः आं सोऽहं (३)

आत्मप्राणप्रतिष्ठा - आं ह्रीं क्रों ३ - मम सर्वेन्द्रियाणि ओं आं ह्रीं क्रों मम वाङ्मनस्त्वक्चक्षुः श्रोत्र जिह्वाघ्राणप्राणा इहागत्य सुखं चिरं तिष्ठन्तु स्वाहा । आं ह्रीं क्रों ३ । आं सोऽहम् (३) ।

७ सर्वदुष्टमृगवशङ्करि नेत्रत्रयाय वौषट्।

७ सर्वसत्त्ववशङ्करि सर्वलोकवशङ्करि त्रैलोक्यं मे वशमानय स्वाहा अस्त्राय फट्। इति मन्त्रान् हृदयादिषु न्यसेदिति षडङ्गन्यासः ॥

## २. मातृकान्यासः ।

अस्य श्रीमातृकासरस्वतीन्यासमहामन्त्रस्य ब्रह्मा ऋषिः, गायत्री छन्दः,. श्रीमातृकासरस्वती देवता । हल्भ्यो बीजेभ्यो नमः, स्वरेभ्यः शक्तिभ्यो नमः, बिन्दुभ्यः कीलकेभ्यो नमः, मम श्यामाङ्गत्वेन न्यासे विनियोगः ॥

सर्वमातृकया सर्वाङ्गे अञ्जलिना त्रिर्व्यापकं कुर्यात् ॥ (४.ओं ऐं क्लीं सौः)

४ अं कं खं गं घं ङं आं अङ्गुष्ठाभ्यां नमः । ४. इं चं छं जं झं ञं ईं तर्जनीभ्यां नमः । ४. उं टं ठं डं ढं णं ऊं मध्यमाभ्यां नमः । ४. एं तं थं दं धं नं ऐं अनामिकाभ्यां नमः । ४. ओं पं फं बं भं मं औं कनिष्ठिकाभ्यां नमः । ४. अं यं रं लं वं शं षं सं हं ळं क्षं अः करतलकरपृष्ठाभ्यां नमः । एवं हृदयादिन्यासः । भूर्भुवस्सुवरोम् इति दिग्बन्धः ॥

## ध्यानम् ।

पञ्चाशद्वर्णभेदैर्विहितवदनदोः पादयुक्कुक्षिवक्षो-
देशां भास्वत्कपर्दाकलितशशिकलामिन्दुकुन्दावदाताम् ।
अक्षस्रक्कुम्भचिन्तालिखितवरकरां त्रीक्षणामब्जसंस्थां-
अच्छाकल्पामतुच्छस्तनघनभरां भारतीं तां नमामि ॥

लमित्यादि पञ्चपूजां कृत्वा ।

